# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



'திகு...திகு...' தேர்தல்

KALKI • 20.12.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



எழுத்தாளர்
ஆர்.வெங்கடேஷ்
வழங்கும்

இன்டர்நெட் ஸ்பெஷல்

'நச்' நயன்

ஆனந்தமான வளையல் திருவிழா!

அலை, அலையாய் டிசைன்கள் ஆயிரம், ஆயிரம்!




ஒவ்வொரு பர்சேஸ்க்கும்

சிறப்பு சலுகைகளுடன்!

பழைய நகைகளை
மாற்றிக்கொள்ள சிறப்பு

எக்ஸ்சேஞ்ச் மேளா

ஸ்ரீ குமரனின் வளையல் வாங்கி..
பொண்ணு சிரிக்கிறா...



ராசியான கடை!



ஸ்ரீ குமரன்
தங்கமாளிகை

தங்கம் • வைரம் • பிளாட்டினம்

சென்னை • கோவை • திருப்பூர் • ஈரோடு • திருச்சி • கரூர்

Shop online at www.sktm.in

பத்தாண்டுகளுக்கு மேலாக இன்டர்நெட் பழக்கம். அப்போது பிராட்பேண்ட் கிடையாது. எல்லாம் டயல்அப் கனெக்‌ஷன்தான். இணைய உலகில் என்ன நடந்து கொண்டு இருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டேன்.

பின்னர் இந்தியாவின் முக்கியமான இணைய நிறுவனமான சிஃபியில் வேலைக்குச் சேர்ந்தேன். பல வாசல்களையும் ஜன்னல்களையும் திறந்துவிட்டது சிஃபி. இன்டர்நெட் தொழில்நுட்பம் பெரிய விஷயமில்லை, கவனமிருந்தால் புரிந்துகொள்ளலாம் என்பதை அங்கே படித்துக்கொண்டேன்.

இதுநடுவே தமிழ் இண்டர்நெட் கடகடவென வளரத் தொடங்கிவிட்டது. எங்கே போனாலும் தமிழர்கள் ஒன்று சேர்ந்துகொள்வார்கள். கூடி வாழும் பழக்கம். இணையமும் விதிவிலக்கல்ல. ஆரம்பத்தில் இருந்து இன்று வரை இருந்து வரும் பல மடலாடற் குழுக்கள் இருக்கின்றன. எழுத்தாளர்கள் இரா.முருகன், என்.சொக்கன், லாஸ் ஏஞ்சல்ஸ் ராம், நான் எல்லோரும் சேர்ந்து ராயர் காபி கிளப் என்ற ஒரு யாஹூ குழுவைத் தொடங்கினோம். ஏராளமான உறுப்பினர்கள் வந்து சேர்ந்தார்கள். பல நாடுகளில் வாழ்பவர்கள். மொழியால் ஒன்றிணைந்தவர்கள். எவ்வளவு விஷயங்கள் முடியுமோ அவ்வளவையும் பேசித் தீர்த்திருக்கிறோம்.

இணையத்தில் எதற்குமே பஞ்சம் கிடையாது. அள்ள அள்ளக் குறையாத அட்சய பாத்திரம். பெரும்பாலான காலைகளில் நான் இன்டர்நெட்டின் முகத்தில்தான் விழிப்பேன். ஞானம் தேடி போதி மரம் போகவே வேண்டாம். இணையமே ஞானச் சொரூபம்.

தமிழ்ப் பத்திரிகைகள் எந்தெந்த விஷயங்களில் எல்லாம் கவனம் செலுத்துகின்றனவோ அவைதான் இணையத்தின் ஆர்வமும். இணையத்தின் கூடுதல் சுவாரஸ்யம், அதன் தொழில்நுட்பம்.

தூரம், தனிமை இவற்றை இன்டர்நெட் முற்றிலும் இல்லாமல் ஆக்கிவிட்டது. வேகம் அதன் தாரக மந்திரம். வளர்ச்சி அதன் பயன்.

இந்த வேகமும் ஆர்வமும்தான் என்னை மேன்மேலும் எழுதத் தூண்டிக்கொண்டு இருக்கின்றன. என் நண்பர்களுக்கு என்றே பிரத்யேகமாக 'நேசமுடன்' என்ற ஈமெயில் இதழை நடத்துகிறேன். ஒவ்வொரு புதன்கிழமையும் மூன்று நான்கு கட்டுரைகளை அவர்களுக்கு அனுப்புகிறேன். அதையே நேசமுடன் டாட் காம் என்ற என் இணையதளத்திலும்



வலையேற்றுகிறேன்.

**க**ல்கியில் இன்டர்நெட் ஸ்பெஷல், நீங்கள் செய்துதர முடியுமா என்று கல்கி ஆசிரியர் கேட்ட போது, உற்சாகம் உள்ளே மடை திறந்துகொண் டது. கல்கி என்னை வளர்த்த பத்திரிகை. பல பெயர்களில், பல கட்டுரைகள், கதைகள் எழுதி யிருக்கிறேன். கல்கி எனக்கு அளிக்கும் மிகப் பெரும் பாராட்டாக இதை எடுத்துக் கொண்டேன்.

இந்த இன்டர்நெட் ஸ்பெஷலில், இணை யத்தின் ஒரு சொட்டுத் தேனை எடுத்துத் தடவ முயற்சித்திருக்கிறேன். பெருங்கடலை 96 பக்கத் துக்குள் அடக்க முடியுமா என்ன?

ஒருவகையில் இந்த இதழ் ஒரு வழிகாட்டி. இன்னொரு வகையில் முகம் காட்டி. நீங்கள் இதை முழுமையாக ரசிப்பீர்கள் என்ற நம்பிக்கையுடன்,

நேசமுடன்,
வெங்கடேஷ்

**(இவ்விதழுக்காக பதினான்கு கட்டுரைகளை எழுதியிருக்கிறார் வெங்கடேஷ். பல ஆலோச னைகளையும் வழங்கியுள்ளார்.
- ஆசிரியர்)**

# ஒரு சொட்டுத் தேன்!







# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,
பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagai.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32

இதழில் வெளியாகும் விளம்பரங்களின்
உண்மைத் தன்மைக்கு
கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# 'நெட்' நயன்

● இன்டர்நெட்டில் இப்போதும் சூப்பர்ஹிட் நயன்தான். நயன்தாரா என்று கூகுளில் தட்டினால், 34,60,000 லிங்க்குகள் வந்துவிழுகின்றன. இது த்ரிஷாவை விட ஜாஸ்தி. நமீதாவைவிட ரொம்ப ரொம்ப ஜாஸ்தி. என்ன ஒன்று, லேட்டா வந்தாலும் லேட்டஸ்ட்டா பீக்கில் இருப்பவர் தமன்னா. தமிழுக்கு ஜூட் விட்டுவிட்ட அசின் இங்கே கணக்கில் இல்லை.

● லேட்டஸ்டாக இன்டர்நெட் முழுவதும் சுற்றி அடிப்பது நயன் - பிரபுதேவா கிசுகிசுக்கள், புகைப்படங்கள், வீடியோ காட்சிகள்தான்.

● இன்டர்நெட்டின் சினிமா களஞ்சியமான ஐஎம்டிபி (IMDb)யில், நயன் பற்றியும் ஒரு வலைப்பக்கம் இருக்கிறது. நயனின் இயற்பெயர் டயனா குரியன். செல்லப்பெயர்களில் ஒன்று 'மணி'யாம். எந்த மணி? கரென்சியோ?

● 2003லிருந்து சினிமா சகவாசம். 2009க்குள் மலையாளம், தெலுங்கு, தமிழ் என்று 31 படங்களை முடிச்சாச்சு.

● 2010ல் மூன்று படங்கள் வரவிருக்கின்றன. கோவாவில் தலையைக் காட்டுகிறார். பாஸ் என்கிற பாஸ்கரன் படத்தில் ஹீரோயின். மலையாளம் எல்ட்ராவுக்கு இப்போதுதான் பூஜைத் தேங்காய் உடைத்திருக்கிறார்கள்.

● நயன்தாரா பேரில் என்னவெல்லாம் வலைப்பக்கங்களை உருவாக்க முடியுமோ அத்தனையையும் உருவாக்கியிருக்கிறார்கள் இன்டர்நெட் புண்ணியவான்கள். நயன்தாரா வெப், நயன்தாரா- லவ், நயன்தாரா பிக்சர்ஸ், நயன்தாரா-ஃபோட்டோஸ், நயன்தாரா-ஆன்லைன் என்று நீட்டிக்கொண்டே போகலாம். http://nay- anthara.sifymax.com/home/ என்ற வலைப்பக்கத்தையே, நயனின் அஃபிஷியல் வலைப்பக்கம் என்று வீக்கிபீடியா சொல்லுகிறது.

● நயன்தாரா ஃபேஸ் புக்குக்குப் போனால், 1647 விசிறிகள் அவரைச் சூழ்ந்துகொண்டு இருக்கிறார்கள். 63 குழுக்கள் நயனின் நளினங்களை அலசி ஆராய்ந்துகொண்டு இருக்கின்றன.

● கூகுள் குழுக்களில் நயன்தாரா ரசிகர் மன்றக் குழு ஒன்று இருக்கிறது. கிட்டத்தட்ட ஐந்நூறு மெம்பர்கள். நயன் பற்றி மூச்சே விடமாட்டேன் என்கிறார்கள். நயன் பற்றிப் பேசாத ரசிகர்கள் என்ன ரசிகர்களோ?

● யாஹூ குழுக்களில்தான் நயனுக்குப் பயங்கர விசிறிகள். நயன்தாரா ஸோன் என்ற இக்குழுவில் 3375 உறுப்பினர்கள். 2005 முதல் இயங்கும் இக்குழுவில், ஒரே நயன் புராணம்தான்.

● இன்டர்நெட் முழுக்க நயனுக்குக் காதல் வீசுகிறது. எந்த சினிமா டிஸ்கஷன் போரத்தைத் திறந்தாலும் அங்கே நான்கு பேர் காதல் சொல்லி நிற்கிறார்கள்!

● ட்விட்டரைத் தட்டினால், பிரபுதேவாவோடு திருமணம் முடிந்துவிட்டதாம், அங்கே இருவரும் போனார்கள், இங்கே சந்தித்துக்கொண்டார்களாம் என்று எக்கச்சக்க ஏக்கப் பெருமூச்சுகள்! எல்லாம் நயன் செய்யும் மாயம்! ○



1. விஜய்யின் ஆவேச வீடியோ ஒன்று யூடியூப்பில் படுபிரபலம். வில்லு படம் சம்பந்தமாக நிருபர் கேட்கும் கேள்விக்கு விஜய் ஆவேசம் கொள்வது, இன்டர்நெட்டில் இருக்கிறது. எப்போது எடுக்கப்பட்டது, யாரால் எடுக்கப்பட்டது என்றெல்லாம் தெரியாது. ஆனால், இந்த வீடியோ காட்சியை வைத்துக்கொண்டு என்னவெல்லாம் குசும்புகள் செய்ய முடியுமோ அத்தனையையும் செய்துவிட்டார்கள் இன்டர்நெட் இல்லாடிகள்.

2. 2009ல் யாஹூ, கூகுள், பிங் போன்ற சர்ச் என்ஜின்களில் அதிகம் தேடப்பட்டவர்கள் லிஸ்ட்டை, அந்தந்த நிறுவனங்கள் வெளியிட்டிருக்கின்றன. அதிகம் தேடப்பட்ட நபர், மைக்கேல் ஜாக்சன். அதேபோல் பாப் பாடகி பிரிட்னி ஸ்பியர்ஸும், அமெரிக்க நடிகை மேகன் ஃபாக்ஸும் அதிகம் தேடப்பட்டவர்கள்.

3. அமிதாப்பின் 'பா' திரைப்பட பிரிமியர் ஷோவை டிவிட்டரில் எல்லோரும் கொண்டாடிவிட்டார்கள். படத்தின் இன்டர்வெல்லிலேயே, பிரபலங்கள் மொபைல் மூலம் டிவிட்டரில் புகழ்ந்து தள்ள, அபிஷேக் பச்சனும் பதிலுக்கு உச்சி குளிர்ந்துவிட்டார். அன்று இரவு முழுவதும் அபிஷேக் தூங்கவே இல்லை. எல்லாம் டிவிட்டர் பாராட்டு மழை.

4. மாதவனின் அடுத்த இந்திப் படம், 3 இடியட்ஸ். 3 இடியட்களில் ஒருவர் மாதவன். இன்னொருவர் ஆமிர்கான். இன்டர்நெட்டில் 3 இடியட் பாடல்களை பாப்புலர் ஆக்க, வீடியோ சாட் எல்லாம் செய்தார்கள்.

5. பாலகுமாரன் ஆசியோடு அவருடைய நெருங்கிய நண்பர்களால் நடத்தப்படும் வலைப்பதிவுக்குப் பெயர்: 'பாலகுமார் பேசுகிறார்'. பாலகுமாரன் எழுதிய கட்டுரைகளை எல்லாம் இங்கே தொடர்ந்து வலையேற்றுகிறார்கள்.

6. விடுதலைச் சிறுத்தைகள் எம்.எல்.ஏ. ரவிக்குமார் தீவிர இன்டர்நெட் பிரியர்.

# கமலுக்கு வெப்சைட



தமிழிலும் ஆங்கிலத்திலும் வலைத்தளங்கள் வைத்திருக்கிறார். தம் கட்டுரைகள், உரைகள், நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் இந்தத் தளத்தில் போட்டு வைத்திருக்கிறார்.

7. ஐம்பது ஆண்டுகளாகத் தமிழ் சினி

# வேண்டாமா..?





**இலங்கை எழுத்தாளர்களின் நூல்களை இலவசமாகவே டவுன்லோட் செய்யலாம்!**

மாவில் கொடிகட்டிப் பறக்கும் கமலுக்கு என்று ஒரு வலைத்தளம் இல்லை.

8. ரஜினிகாந்துக்கு அவருடைய ரசிகர்கள் வைத்துள்ள வலைத்தளம் ரஜினி ஃபேன்ஸ் டாட் காம். 2001ல் இருந்து ஒரு யாஹூ குழுவையும் நடத்துகிறார்கள். 16875 உறுப்பினர்கள் இந்தக் குழுவில் இருக்கிறார்கள். லேட்டஸ்ட் தகவல்களை இங்கே உடனே அப்டேட் செய்கிறார்கள்.

9. துணை முதல்வர் மு.க.ஸ்டாலின் அவருடைய இணையதளத்துக்கு வரும் கடிதங்களுக்குப் பதில் போடுவது மட்டுமல்ல, தொடர்ந்து வலைப்பதிவும் எழுதுகிறார்.

10. த்ரிஷா, தமன்னா, ப்ரியாமணி, நயன்தாரா எல்லோரும் லாப்டாப் ப்ரியைகள். ஷூட்டிங் ஸ்பாட்டுகே லாப்டாப்போடு வருகிறார்கள். என்ன பார்க்கிறார்கள் என்பது அவர்களுக்கே வெளிச்சம்.

11. தயாநிதி மாறனும், டி.டி.வி. தினகரனும், விஜயகாந்த்தின் உறவினர் சுதீஷும் பிளாக் பெர்ரியைப் பயன்படுத்துகிறார்கள். தங்களுக்கு வரும் இமெயில்களை பிளாக்பெர்ரியிலேயே பார்த்து விடுவார்களாம்!



12. இலங்கை எழுத்தாளர்களின் புத்தகங்களை எல்லாம் இணைய தளத்தில் சேமித்து வைக்கிறார்கள். நூலகம் டாட் நெட் என்ற இந்தத் தளத்தில் எல்லா புத்தகங்களையும் இலவசமாக டவுன்லோட் செய்து கொள்ளலாம்.

13. சென்னை மாநகராட்சியின் இணையதளத்திலிருந்தே நீங்கள் பிறப்பு இறப்பு சான்றிதழ்களை டவுன்லோட் செய்துகொள்ளலாம்.

14. தமிழச்சி தங்கபாண்டியனின் இமெயில் ஐடி, வனப்பேச்சி. இது அவர் எழுதிய ஒரு கவிதைத் தொகுதியின் தலைப்பும்கூட. ●



# ரிபோசோம் ரகசியங்கள் அம்பலம்!

ரூ250/- மூன்றாம் பரிசு பெறும் சிறுகதை -1

## விளையாட்டில்ல!

கதைகள், கவிதைகள், பரிசுப் போட்டி...

# கோகுலம்

டிசம்பர் 2009 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!



## அமரர் கல்கி நினைவு நாள்

# அது ஒரு

"கல்லூரியிலிருந்து அந்த மாணவன் பஸ்ஸில் வீடு திரும்பிக்கொண்டிருந்த போது பர்ஸை ஒருவன் பிக்பாக்கெட் அடித்துவிட்டு, தப்பி ஓட முயன்றான். அந்தப் பையன் பிக்பாக்கெட் பின்னாலேயே துரத்திக் கொண்டு ஓடி, அவனைப் பிடிக்க முயன்றான். ஆனால் பிக்பாக்கெட் தப்பி விட்டான். பையன் வீடு திரும்பியதும், தன் அப்பாவிடம், பர்ஸைப் பறிகொடுத்தது பற்றிச் சொன்னான். வழக்கமாக எந்த அப்பாவும், 'ஐயையோ! பர்ஸில் எவ்வளவு பணம் இருந்தது?' என்றுதானே கேட்பார்? ஆனால் அந்தப் பையனின் அப்பா அப்படி எதுவும் கேட்காமல், 'சபாஷ்! திருடனை விடாமல் துரத்திக் கொண்டு போனாயா?' என்று கேட்டார். பணம் போனாலும் பரவாயில்லை என்று, மகன் ராஜேந்திரனின் விடாமுயற்சியைப் பாராட்டிய அந்த அப்பா அமரர் கல்கி."

- இந்த சுவாரஸ்யமான சம்பவத்தைச் சொன்னவர் இந்தியன் வங்கியின் தலைவரும், நிர்வாக இயக்குநருமான எம்.எஸ்.சுந்தரராஜன். கல்கி ராஜேந்திரன் எழுதிய 'அது ஒரு பொற்காலம்' என்ற நூலை வெளியிட்டு, அதில் இடம் பெற்றுள்ள ஏராள சம்பவங்களுள் ஒன்றை எடுத்துச் சொல்லி வியந்தார் அவர். "புத்தக வெளியீடு நிகழ்ச்சிக்கு என்னை அழைத்தது, வங்கியில் செக் புக், பாஸ் புக் போன்ற 'புக்'குகளைக் கையாள்வதால்தான் போலும்" என்று நகைச்சுவையாக ஆரம்பித்தவர், சுதந்திரப் போராட்ட வீரர், எழுத்தாளர், பத்திரிகையாளர், கலை விமர்சகர், ஓர் உயர்ந்த மனிதர் என அமரர் கல்கியின் பல பரிமாணங்களைப் பற்றி எடுத்துச் சொல்லி வியந்தார்.



* திருப்பூர் கிருஷ்ணன், கல்கி ராஜேந்திரன், எம்.எஸ்.சுந்தரராஜன்

இடம்: சென்னை மைலாப்பூர் ராக சுதா அரங்கம்.

அனாஹிதா ரவீந்திரனின் இறை வணக்கத்தோடு கல்கி ஆசிரியர் சீதா ரவியின் தொகுப்புரையோடு துவங்கியது, கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை ஏற்பாடு செய்திருந்த அமரர் கல்கியின் 55வது ஆண்டு நினைவு நாள் (டிச. 5) நிகழ்ச்சி. தலைமை தாங்கிப் பேசிய எம்.எஸ்.சுந்தரராஜன், "நான் கல்கி பத்திரிகையின் நீண்ட நாள் வாசகன் என்ற முறையில் இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்வதை மிகவும் பெருமையாகக் கருதுகிறேன்" என்றும் குறிப்பிட்டார்.

# பொற்காலம்!

ஃபைனான்சியல் எக்ஸ்பிரஸ் பத்திரிகையின் 2007-08ஆம் ஆண்டுக்கான சிறந்த வங்கிக்கான விருதைப் பெற்றுள்ளது இந்தியன் வங்கி. தவிர, இந்தியாவின் பெரிய 10 வங்கிகளில் அதுவும் ஒன்று. மேலும், மாணவர்கள் தங்கள் மேற்படிப்பைத் தொடர கல்விக்கடன் வழங்குவதில் முன்னணியில் இருக்கிறது இந்தியன் வங்கி. அமரர் கல்கி, ஏராளமான ஏழை மாணவர்களுக்கு, படிப்புக்காக நிறைய உதவி செய்திருக்கிறார். அவரது பெயரில் அமைக்கப்பட்டுள்ள இந்த அறக்கட்டளையும் கல்கி வழியிலேயே படிப்பில் சிறந்து விளங்கும் ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கி வருகிறது. எனவே, இன்றைய விழாவில் தலைமை தாங்கி, நூல் வெளியிட இந்தியன் வங்கியின் எம்.எஸ்.சுந்தரராஜன் மிகவும் பொருத்தமானவர்'' என்று குறிப்பிட்டார் வரவேற்புரை வழங்கிய அறங்காவலர் வி.கோபாலன்.



* இறைவணக்கம் பாடிய அனாஹிதா ரவீந்திரனுக்கு நினைவுப் பரிசு வழங்குகிறார் அறங்காவலர் லக்ஷ்மி நடராஜன்

''இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் ரூபாய் பத்தாயிரத்தில் தொடங்கி, நடப்பு ஆண்டில் ஐந்து லட்சம் ரூபாய் அளவுக்கு கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை தகுதியான மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கி இருக்கிறதென்றால், அதற்கு கல்கி அன்பர்களின் அன்பும், ஆதரவும்தான் முக்கியக் காரணம்'' என்று நெகிழ்ச்சியுடன் கூறினார் கோபாலன்.



* தேச மங்கையர்க்கரசி

கல்கி இதழில் இரு தவணைகளில் '70 முதல் 7 வரை' என்ற தலைப்பில் கி.ரா. எழுதிய அனுபவங்களின் தொகுப்பு, 'அது ஒரு பொற்காலம்' என்ற தலைப்பில் வானதி பதிப்பக வெளியீடாக இந்த நிகழ்ச்சியில் வெளியிடப்பட்டது. புத்தகத்தை சுந்தரராஜன் வெளியிட, முதல் பிரதியைப் பெற்றுக்



கொண்டு நூல் அறிமுக உரை நிகழ்த்தினார் திருப்பூர் கிருஷ்ணன்:

''கல்கி ராஜேந்திரன் எழுதியுள்ள இந்த நூலைப் படிக்கிறபோது, ஒரு தமிழ் எழுத்தாளருக்குரிய லட்சணத்தைத் துளியும் காணோம்'' என்று ஒரு போடு போட்டார். அதனைத் தொடர்ந்து, ''தமிழ் எழுத்தாளர் என்றால், அவர் தம்மைப் பற்றியே பேச வேண்டும்; எழுத வேண்டும்; மற்றவர்களை மட்டம் தட்ட வேண்டும். அதுவே இன்று ஒரு எழுத்தாளருக்குரிய இலக்கணமாகிவிட்டது! இந்த நூலில் ராஜேந்திரன் தம் வாழ்க்கையில் நடந்த சம்பவங்களைத்தான் எழுதி இருக்கிறார். ஆனால் தம்மைப் பற்றிப் பிரகடனமாக ஒரு வார்த்தைகூட எழுதவில்லை. அது மட்டுமில்லை. தமது கருத்துக்களைச் சொல்கிறபோது யாருடைய மனமும் புண்பட்டு விடக்கூடாது என்று மிகக் கவனமாக வார்த்தைகளைக் கையாண்டிருக்கிறார். அந்த மனப் பக்குவம் பாராட்டுதலுக்குரியது'' என்றார்.

* பதிப்பாளர் சார்பாக - திருமதி 'வானதி' திருநாவுக்கரசு



* நூல் வடிவமைப்பாளர் ஹரீஷ் குகன்



காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருந்த பாபு ராஜேந்திர பிரசாத் சென்னைக்கு விஜயம் செய்த சமயத்தில் பிறந்ததால், அமரர் கல்கி தம் மகனுக்கு ராஜேந்திரன் என்று பெயர் சூட்டிய தகவலைச் சொல்லிவிட்டு, வை.மு. கோதை நாயகி அம்மாள், காந்திஜியின் மகனுக்கும் - ராஜாஜியின் மகளுக்கும் பிறந்த குழந்தைக்குப் பெயர் சூட்டிய சம்பவத்தைக் குறிப்பிட்டார் திருப்பூர் கிருஷ்ணன். குழந்தையைப் பார்க்க வீட்டுக்கு வந்த கோதை நாயகியிடம், பேரனுக்கு ஒரு நல்ல பெயராகச் சூட்டும்படி ராஜாஜி கேட்க, உடனே பளிச் சென்று ராஜாஜியின் பெயரிலிருந்து ராஜ், காந்திஜியின் பெயரிலிருந்து மோகன் (தாஸ் கரம்சந்த் காந்தி) இரண்டையும் இணைத்து ராஜ் மோகன் என்று பெயரிட்டாராம் வை.மு.கோ.



* வரவேற்புரை : வி.கோபாலன்



* நூல் தயாரிப்பில் உதவிய சுப்ர.பாலன்

நிகழ்ச்சியின் கிளைமாக்ஸாக தேச மங்கையர்க்கரசியின் ஆன்மிகப் பேருரை. தலைப்பு: 'மீனாட்சி கல்யாணம்.' திருமுருக கிருபானந்த வாரியாரின் மாணவியான மங்கையர்க்கரசியின் உரை சலசலக்கும் அருவியாக அரங்கத்தை நிறைத்தது. அற்புதமான நடை, ஆங்காங்கே நகைச்சுவைத் தெறிப்புகள் என பல இடங்களில் வாரியார் சுவாமிகள் பளிச்சிட்டார்.

நகைச்சுவை மிளிரப் பேசினாலும் மங்கையர்க்கரசியின் சொற்பொழிவில் ஆழமும் ஈடுபாடும் ததும்பி நின்றன. இளம் இருபத்து நான்கு வயதில் அவர் ஆற்றிய உரை, வாரியார் சுவாமிகளைப் பெரிதும் வியந்த அமரர் கல்கிக்கு நிறைவான அஞ்சலியாக அமைந்தது.

தொகுப்பு : **எஸ்.சந்திரமௌலி**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# வாசகர்களுக்குப் போட்டி...

## வாழ்க்கைன்னா 'சேலஞ்ச்' இருக்கணும்!



# 140 எழுத்துகளில் ட்விட்டர் கதை!

ட்விட்டர் என்பதைப் பற்றி (தெரியாதவர்கள் இல்லை என்பது உட்பட) இந்த இதழில் தெரிந்து கொண்டிருப்பீர்கள். 140 எழுத்துகளில் எழுதும் சவால்தான் ட்விட்டர். எழுத்துகள் என்று சொல்வது பெயருக்குத்தான். கமா, முற்றுப் புள்ளி... ஏன் சொற்களுக்கு இடையிலான இடைவெளிகூட கணக்கில் வரும்.

உங்களுக்கு அவ்வளவு நெருக்கடி வேண்டாம். கமா, முற்றுப்புள்ளி, இடைவெளி, கதையின் தலைப்பு... இவையெல்லாம் கணக்கில் வராமல், 140 எழுத்துக்களை முழுமையாகப் பயன்படுத்தி ஒரு கதை சொல்லுங்கள். எழுத்து கூடவோ, குறையவோ கூடவே கூடாது. சவாலா...? எழுதி இந்த கூப்பனை ஒட்டி அனுப்புங்க. தேர்வாகும் கதைகளுக்குப் பரிசு உண்டு.

ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

ட்விட்டர் கதை
ஆசிரியர், கல்கி, கல்கி பில்டிங்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032

கடைசி தேதி:
25.12.09



# கல்கி



2009 டிசம்பர் 20
விரோதி மார்கழி 5
மலர் : 68
இதழ் : 21

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## திண்டாட்டத்தில் ஆந்திர அரசு!

**பி**ரச்னைகளை முற்ற விடுவதில் நமது மத்திய-மாநில அரசுகளுக்கு இருக்கும் நிபுணத்துவம் அலாதிதான்! ஆந்திர முதல்வர் ரோசய்யா டெல்லிக்குச் சென்று சோனியாவைச் சந்திப்பது என்று முடிவெடுப்பதற்குள் சந்திரசேகர ராவின் உயிரே ஊசலாட ஆரம்பித்துவிட்டது!

தனித் தெலங்கானா வேண்டும் என்ற கோரிக்கை நாற்பது ஆண்டுகளுக்கு முன் எழுந்தபோதே அதற்கான காரணங்கள் ஆராயப்பட்டன. ஆந்திரத்தின் இதர பகுதிகளைக் காட்டிலும் தெலங்கானா மிகவும் வறண்ட, பின்தங்கிய பகுதியாக இருப்பதே அப்பகுதி மக்களுக்கு அதிருப்தி ஏற்படுத்தியது என்பதும் தெரிய வந்தது. ஆனால், அந்த அதிருப்தியைக் களைய, தெலங்கானாவை முன்னேற்ற, எதுவுமே செய்யப்படவில்லை என்பதுதான் சோகம். இப்போது பிரச்னை தீவிரமடைந்துள்ளது என்பதுடன், ராஜசேகர ரெட்டியின் விபரீத மரணத்தைத் தொடர்ந்து ஆந்திர அரசு பலவீனமாக, பிளவுபட்டுக் கிடக்கும் நிலையில், போராட்டத்தைக் கடுமையாக்கினால் தங்கள் கை ஓங்கும் என்பதை தெலங்கானா ராஷ்டிர சமிதியினர் நன்றாகவே உணர்ந்து செயல்பட்டுள்ளனர். முதல்வர் ரோசய்யாவுக்கு காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களின் முழு ஆதரவு இல்லை; அவரே பதவியில் நீடிக்கப் போராடிக் கொண்டிருக்கிறார் என்பது டி.ஆர்.எஸ். கட்சியினருக்கு நன்றாகவே தெரியும். இது போதாதென்று, ஆந்திர எம்.எல்.ஏக்களுள் தெலங்கானா

என் பங்கைக் கொடுத்துடு...
வெட்டாம விடமாட்டேன்
தெலங்கானா
ஆந்திரப்பிரதேசம்
ஒருங்கிணைந்த ஆந்திரம்
தனி ராயலசீமா கோரிக்கை.




பிரிவைச் சேர்ந்தவர்கள் எல்லோருமே தனித் தெலங்கானாவை ஆதரிக்கிறார்கள். உடன் விளைவாக, ராயலசீமா, ஹைதராபாத், வடக்கு கடற்கரை ஆந்திரம் என்று ஆந்திரப் பிரதேசத்தைத் துண்டாட, பலர் புறப்பட்டுள்ளனர்!

உண்ணாவிரதத்தைப் பிடிவாதத்துடன் தொடர்ந்த சந்திரசேகர ராவின் நிலைப்பாடும் முறையானது அல்ல. பேச்சுவார்த்தைக்கு அரசு முன்வந்த போதிலும் அதைத் தட்டிக்கழித்துத் தனித் தெலங்கானா கேட்ட அவரது முரட்டுத்தனத்தில் அரசியல் ஆதாயம் தேடும் நோக்கமும் கலந்திருந்ததை மறுக்க முடியாது.

ராவின் பிடிவாத உண்ணாவிரதத்தினால் தெலங்கானா ஆதரவாளர்களிடையே ஆத்திரமும் வன்முறையும் பரவி, நிறைய பொதுச் சொத்துச் சேதத்துக்கும் பொருள் சேதத்துக்கும் காரணமாகியிருக்கிறது.

இப்பிரச்னையை எந்த முனையிலிருந்து தொடங்கித் தீர்ப்பது என்பது புரியாமல் ஆந்திர அரசும் காங்கிரஸ் கட்சியும் திண்டாடிவிட்டு, இறுதியில் தனித் தெலங்கானா கோரிக்கையை ஏற்றுக் கொண்டுவிட்டன.

தற்சமயத்துக்குப் பிரச்னை அடங்கியுள்ளது. ஆனால், சட்டமன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு செயலாக்கம் பெற சிறிது காலம் ஆகும். அதற்குள் சந்திரசேகர ராவை ஆந்திர முதல்வர் ரோசய்யா சந்தித்து, தனித் தெலங்கானா போன்ற வறண்ட பகுதி எவ்வாறு தன்னிறைவு பெற்று இயங்க முடியும் என்பது குறித்து ஓர் அறிக்கை தயாரிக்கச் சொல்லலாம். அதன் மூலம் இந்தப் பிரிவினையில் உள்ள நடைமுறைச் சிக்கல்கள் தெரியவரும். ராயலசீமா, ஹைதராபாத் என்று பிரிவினை கோரும் இதர பிரிவினருக்கும் அவ்வறிக்கை ஒரு பாடமாக அமையக்கூடும். ●

'ஏய் ராஜ்! நெட்ல நீ எழுதுறது இல்லையா?' இல்லையென்றால் நீ பழைய, பிளாக் அண்ட் வொயிட் ஸ்டூடண்ட். ஆமாங்க... நம்ம ஊர் மக்கள் எங்கே போனாலும் அங்கே ஒரு பிள்ளையார் கோயில் கட்டுவார்கள், பத்திரிகை நடத்துவார்கள், இப்போ இன்டர்நெட்டில் இதழ் நடத்துவது லேட்டஸ்ட் டிரெண்ட். அதுல எழுதுறதுதான் யூத் டிரேட் மார்க்.



✱ கணேஷ் சந்திரா

✱ ராஜாராம்

# ப்ளாக் & வொயிட் ஸ்டூடண்ட்?!

"சுமார் 12 வருடங்களுக்கு முன்னால், நல்ல தமிழ்க் கட்டுரைகளை, சிறு கதைகளை கவிதைகளை இணைய வெளியில் வைக்கும் முயற்சியாகத்தான் இதை ஆரம்பித்தோம். பிறகுதான் இணையப் பத்திரிகையாக திண்ணையைக் கொண்டு வந்தால் என்ன என்று தோன்றியது'' என்கிறார் திண்ணை டாட் காம் ஆசிரியர் கோபால் ராஜாராம்.

"வெறும் பொழுதுபோக்கு இதழாக இல்லாமல் சமூக நோக்கத்துடன் சுமார் பத்தாயிரம் தமிழ்க் கட்டுரைகளை இலவசமாக இணையத்தில் படிக்கும் வாய்ப்பு உலகெங்குமுள்ள தமிழ் வாசகர்களுக்கு நிலாச்சாரல் மூலம் கிடைக்கிறது'' என்கிறார் அதன் ஆசிரியர் நிலா.

ஆனால், கால ஓட்டத்தில் பல மாறுதல்கள். பல இணையதளங்கள் மூடப்பட்டுவிட்டன. இன்றைக்கு இருக்கும் திண்ணை டாட் காம், தமிழோவியம் டாட் காம், நிலாச்சாரல் டாட் காம் ஆகிய இணைய இதழ்கள், வணிக நோக்கம் அற்றவை. வணிக நோக்கம் இல்லாததனாலேயே இந்தத் தளங்களால் இன்னும் நீடித்து நிற்க முடிகிறது.

"எத்தனையோ புதிய எழுத்தாளர்களை உருவாக்குவதில் எங்களுக்குப் பெருமைதான்!'' எனக் கூறுபவர் கணேஷ் சந்திரா. இவர் தமிழோவியம் டாட் காம் வலைத் தளத்தின் பதிப்பாளர்.

இணைய இதழ்களில் வெளியாகும் படைப்புகளின் தரம் அவ்வளவு சுவாரசியமாக இல்லை என்றொரு குற்றச்சாட்டும் உண்டு. அச்சு இதழ்களில் இருக்கும் நேர்த்தி, ஆசிரியரின் கவனம் இங்கே இல்லையோ என்று எண்ணத் தோன்றுகிறது.

வருவாய் இல்லை என்கிறபோது, இதுபோன்ற இணைய இதழ்களை நடத்த எப்படி உற்சாகம் வருகிறது என்று கேட்டால்...

"வாசகர்களின் ஆதரவுதான் பெரிய டானிக். மேலும் இணையம் ஒரு மாற்று மீடியம். மற்ற ஊடகங்களில் பேச முடியாததை இங்கே பேச முடியும். எழுத முடியும். அந்தச் சுதந்திரம் முக்கியம். அதுதான் எங்களை ஊக்குவிக்கிறது'' என்றார் கோ.ராஜாராம்.

புதிதாக எழுத ஆரம்பிப்பவர்களுக்கு இணைய இதழ்கள் நல்ல பயிற்சிக் களமாக இருப்பதும் ஒரு கூடுதல் சௌகரியம் தானே!

# ஸிந்த்தால் சின்ன பேக்

# இப்போது ரூ.6-ல்







அம்மா சொல்றாங்க இது சருமத்துக்கு நல்லதுன்னு
மேலும் அப்பா சொன்னாங்க அற்புதமான
நறுமணமுள்ளதுன்னு. டாக்டர் ஆன்ட்டி சொன்னாங்க
இதை எல்லோரும் உபயோகிக்கனும்னு. அதனாலதான
ரூ.6/-ல் நான் பெற்றேன் என்னோட சின்ன ஸிந்த்தால்.

தலைமுறை தலைமுறையாக உங்கள் ஸ்கின் ஸ்பெஷலிஸ்ட்.

இன்டர்நெட் உலகில் அடுத்தொரு புரட்சி நடக்க இருக்கிறது. இணையத்தில் எந்த ஒரு விஷயத்தைப் பற்றித் தேடுவதானாலும், எல்லோரும் போவது கூகுள் பக்கத்துக்குத்தான். கூகுள் கடவுள் மனதுவைத்தால், உலகின் மூலை முடுக்குகளில் உள்ள அத்தனை தகவல்களையும் செய்திகளையும் நாம் அள்ளி எடுத்துக்கொள்ளலாம்.

இந்த கூகுள்தான் அடுத்த கட்டப் பாய்ச்சலுக்குத் தயாராகிக்கொண்டு இருக்கிறது. இதுநாள்வரை, நாம் கணினி என்று ஒன்றை வாங்கினால், அதில் ஆபரேட்டிங் சிஸ்டம் என்ற ஒன்று இருக்கும். உலகின் முன்னணி ஆபரேட்டிங் சிஸ்டம், விண்டோஸ். 90 சதவிகிதம் மக்களுக்கு மேல் இந்த ஆப்பரேட்டிங் சிஸ்டத்தைத்தான் பயன்படுத்தி வருகிறார்கள். அதைத் தொடர்ந்து லைனக்ஸ் போன்ற ஆப்பரேட்டிங் சிஸ்டம்கள் இருக்கின்றன.

இனி இதுபோல் ஒரு ஆப்பரேடிங் சிஸ்டமே தேவை இல்லை என்கிறது

# கூகுள் குரோம் கொண்டாட்டம்; மைக்ரோசாஃப்ட் திண்டாட்டம்

கூகுள். கூகுள் நிறுவனம் ஏற்கெனவே கூகுள் குரோம் என்ற பிரவுசரை (இணைய உலாவி) அறிமுகப்படுத்தி, அதைப் பல கோடி பேர் பயன்படுத்தி வருகின்றனர். இந்த பிரவுசரிலேயே இனி எல்லாவற்றையும் சேமித்துக் கொள்ளலாம், இதிலேயே உங்களுக்குத் தேவைப்படும் வேர்ட், எக்ஸல், ஸ்ப்ரெட்ஷீட் போன்ற அத்தனை உபயோகமான மென்பொருட்களும் இருக்கும். அதை நீங்கள் அப்படியே இணையத்தில் இருந்தே எவ்வப்போது தேவையோ, அவ்வப்போது பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சொல்கிறது கூகுள். இவற்றைத் தனியே லைசன்ஸ்ட் மென்பொருளாக வாங்கி, கணினியில் 'ஏற்றி' வைக்க அவசியமே இராது! இணையத் தொடர்பும் கணினியும் போதும் இவற்றைப் பயன்படுத்த!

கேட்கவே ஆச்சரியமாக இல்லை? ஆனால், சாத்தியம் என்கிறது கூகுள். சென்ற மாதம்

கூகுள் குரோமின் புதிய ஆப்பரேடிங் சிஸ்டம் அறிமுகமாகி, பரிசோதனை நிலையில் இருக்கிறது. சோதனை நிலையில் பயன்படுத்திப் பார்த்தவர்கள் எல்லோரும் ஆஹா ஓஹோ வென்று மெச்சுகிறார்கள். அப்படியென்ன கூகுள் குரோம் ஆப்பரேடிங் சிஸ்டத்தின் சிறப்புகள்?

நீங்கள் எழுதி, படம் எடுத்து அல்லது வீடியோ எடுத்து சேமிக்கும் அனைத்தையும் இணையத்தில் சேமித்துவைக்க வசதி செய்து தருகிறது கூகுள். இதனால், உங்கள் பழைய தாத்தா காலத்துக் கம்ப்யூட்டரைக் கூடப் பயன்படுத்த முடியும். கணினி புத்தம் புதிதாக இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை.



அவ்வளவுதான். தீ பற்றிக்கொண்டிருக்கிறது! மடிக்கணினி (லேப் டாப்) தயாரிக்கும் நிறுவனங்களான ஏசர், லெனோவா, ஹெச்.பி, தோஷிபா போன்றவை உடனே அடுத்த ஆண்டு தாம் வெளியிடவிருக்கும் அனைத்து புது வகை மடிக்கணினிகளிலும் இந்தப் புதிய பிரவுசரை போட்டுக் கொடுக்க இருக்கிறார்கள். உலகின் எந்த மூலையில் இருந்தாலும், இந்த ஆப்பரேட்டிங் சிஸ்டத்தைப் பயன்படுத்த முடியும்.

மேலும், சாதாரண ஆப்பரேடிங் சிஸ்டம் உயிர்த்தெழ 40 வினாடிகள் பிடிக்கின்றன என்றால், இது வெறும் 7 நொடிகளில் கண் விழித்துக்கொள்ளும். மைக்ரோசாப்ட் ஆப்பரேட்டிங் சிஸ்டம்களைவிட, மிக வேகமானது கூகுள் குரோம்.

இதையெல்லாம் சாத்தியமாக்கியிருப்பது க்ளௌவுட் கம்ப்யூட்டிங் என்கிற தொழில் நுட்பம்.



கூகுள் குரோம் விஷயம் வெளியே வந்தவுடனே மைக்ரோசாஃப்ட் இலேசாக ஆடிப்போய் விட்டது. இந்தப் புதிய முறை அறிமுகமானால், மைக்ரோசாஃப்ட் லாபம் ஆட்டம் கண்டுவிடும். அதனால், அவசர அவசரமாக மைக்ரோசாஃப்ட், தன்னுடைய விண்டோஸ் ஆப்பரேட்டிங் சிஸ்டத்தின் ஏழாவது வெர்ஷனை மார்க்கெட்டில் அறிமுகப்படுத்தியது. முன்பு விண்டோஸ் விஸ்டாவை அறிமுகப்படுத்திய போது ஏற்பட்ட நஷ்டங்களை விண்டோஸ் 7 தீர்த்து வைக்கும் என்று மைக்ரோசாப்ட்காரர்கள் தெரிவிக்கிறார்கள்.

கூகுள் குரோம் மக்கள் பயன்பாட்டுக்கு வரும் நாள் தொலைவில் இல்லை. அப்போது இருக்கிறது கச்சேரி! ●



* கங்குலி



* ஜான் ரைட்



இந்திய கிரிக்கெட் அணி டெஸ்ட் கிரிக்கெட் தரவரிசைப் பட்டியலில் முதலிடம் பெற்றது குறித்து குடியரசுத் தலைவர்வரை வாழ்த்து தெரிவித்து அகமகிழ்ந்துவிட்டார்கள். இந்த முதலிடம் இன்னும் எத்தனை வாரங்களுக்கு அல்லது மாதங்களுக்கு இந்தியா வசம் இருக்கப் போகிறது என்பதுதான் இப்போதைய முக்கியக் கேள்வி.

முதல் வந்தனம் கங்குலிக்கும் ஜான் ரைட்டுக்கும்தான் சொல்ல வேண்டும். இந்திய கிரிக்கெட் அணியை ஆஸ்திரேலிய கிரிக்கெட் தரத்துக்குக் கொண்டு செல்லப் பாடுபட்டவர்கள் இவர்களே. ஷேவாக்கைத் தொடக்க ஆட்டக்காரராக மாற்றி புதிய அத்தியாயத்துக்கு வழி வகுத்தார்கள். இன்றைய அணியில் இல்லாத கும்ப்ளே, வெங்கடேஷ் பிரசாத், ராபின் சிங் போன்றவர்களுக்கும் இவ்வெற்றி உரித்தானது. அவ்வப்போது இந்திய அணிக்குள் வந்துபோன ஆர்.பி.சிங், வாசிம் ஜாபர், தினேஷ் கார்த்திக், இர்ஃபான் பதான், முனாஃப் படேல் என்று அத்தனை பேருக்கும் இந்த வெற்றியில் பங்கு உண்டு.

ஆனால் என்ன பிரயோசனம்? அடுத்ததாக நடக்கவிருக்கும் இங்கிலாந்துடனான டெஸ்ட் தொடரை தென் ஆப்பிரிக்கா வென்றுவிட்டால் நெ.1 ரேங்கிங் இந்தியா வசம் இருக்காது. அடுத்த வருடம் பெரிதாக டெஸ்ட் போட்டிகள் எதுவும் விளையாடாத காரணத்தினால் இந்தியாவிடமிருந்து எளிதில் சிம்மாசனம் பறிபோகப் போகிறது. ஏற்கெனவே இந்த வருடம் ஆறு டெஸ்ட் போட்டிகள் மட்டுமே ஆடியிருக்கிறது இந்திய அணி. அடுத்த வரு



## எச்சரிக்கை!

சோஷியல் நெட்வொர்க்கிங் வலைத்தளங்களில் ஏராளமான பிரச்னைகள் இருக்கின்றன. முக்கியமாக உங்களிடம் நட்பு பாராட்ட வருபவர் தம்மைப் பற்றிக் கொடுத்திருக்கும் தகவல்கள் சரியானவையாக இருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. இணையத்தில் ஆண்கள் பெண் பெயரில் நடமாடுவது மிகச் சுலபம். உங்களைப் பற்றி எல்லா தகவல்களையும் திரட்டிக்கொண்டு, வேறு ஏதேனும் வழியில் ஏமாற்றிவிடலாம்.

ச.ந. கண்ணன்




* ஷேவாக்

# எத்தனை நாளைக்கு நெ.1?

டம் ஐந்து டெஸ்ட் போட்டிகள் மட்டும்தான். ஆனால் 2010ல் ஆஸ்திரேலியா, தென் ஆப்பிரிக்கா, இங்கிலாந்து, பாகிஸ்தான் போன்ற அணிகள் குறைந்தது பத்து டெஸ்ட் போட்டிகளாவது ஆடுகின்றன.

ஆனால் இன்றுவரை இந்திய கிரிக்கெட் வாரியம் அசைந்து கொடுக்கவில்லை. அதற்கு 20-20தான் முக்கியம். ஆரம்பத்தில் 20-20 போட்டிகள், கிரிக்கெட்டுக்குக் கேடு என்று சொல்லிவந்த வாரியம், இப்போது மாய்ந்து மாய்ந்து 20-20 போட்டிகளை நடத்திக் கொண்டிருக்கிறது. ஐ.பி.எல். சாம்பியன் லீக் போட்டிகளால் அதன் வங்கிக் கணக்கு ஏகத்துக்கும் உயரும் என்பதால் பி.சி.சி.ஐ.க்கு டெஸ்ட் போட்டிகள்மீது கிஞ்சித்தும் அக்கறை கிடையாது. டெஸ்ட் போட்டிகள் நடத்த லாயக்கே இல்லாத மையங்களிலும் பிட்ச்சுகளிலும் அது டெஸ்ட் போட்டிகள் நடத்திக் கொண்டிருப்பது ஓர் உதாரணம்.

வருடத்துக்குப் பத்து டெஸ்டுகள் இல்லாவிட்டால் நாங்கள் கிரிக்கெட் ஆட மாட்டோம் என்று தோனி தம் எதிர்ப்பைத் தெரிவிப்பாரா என்பது சந்தேகமே. அவருக்கும் டெஸ்ட் போட்டிகளை விட 20-20யே அதிகப் பணமும் புகழும் சம்பாதித்துக் கொடுக்கிறது. அதில் வேலை பளுவும் குறைவு. அதனால் குறுகிய காலம் மட்டுமே இருக்கப் போகும் இந்த நெ.1 நிலையை இன்னும் சத்தமாகவே கொண்டாடி மகிழலாம்.



* தோனி

டாரெண்ட் :

# திருட்டு சினிமாவின் சரணாலயம்!

''யோகி பார்த்தாச்சா?''

''வந்த அன்னைக்கே பார்த்துட்டேனே?''

''டிக்கெட் கிடைச்சுதா? எந்தத் தியேட்டர்?''

''டாரெண்ட்ல பார்த்தேன்'' என்பார்.

லேட்டஸ்ட் ஆங்கிலம், தமிழ், மலையாளப் படங்களின் எந்தப் பெயரை வேண்டுமானாலும் சொல்லுங்கள். டாரெண்ட்டில் படம் ரெடி.

தமிழ் சினிமா ஒருபக்கம் திருட்டு வி.சி.டி. பிரச்னையால் தள்ளாடுகிறது என்றால், இன்னொரு பக்கம், இன்டர்நெட்டால் திண்டாடுகிறது.

தொழில்நுட்ப வளர்ச்சி பிரச்னையாகவும் மாறும் என்பதற்கு டாரெண்ட் மற்றொரு உதாரணம்.

மிகப் பெரிய கோப்புகளை ஈமெயிலில் அனுப்ப முடியாது. அதை ஏதேனும் ஒரு வலைத்தளத்தில் போட்டு டவுன்லோட் செய்யவும் அனுமதிக்க முடியாது. சர்வர் லோடு தாங்காமல் சுருண்டு போய் விடும்.

இந்த நிலையில்தான், டாரெண்ட் அறிமுகமானது. இதில் கோப்புகள் ஒவ்வொன்றும் அந்த நெட்வொர்க்குக்குள் இருக்கும் பயனர்களிடையே சுழன்று கொண்டு இருக்கும். அதனால் சர்வர் முடங்கிப் போகாது.

இது தொழில்நுட்பம். விஷயத்துக்கு வருவோம். தமிழ்டொரெண்ட் டாட் நெட், தமிழ்தண்டர் டாட் காம் ஆகிய வலைத்தளங்கள் தமிழ் சினிமா மோகிகளிடையே மிகவும் பிரபலம். ஒவ்வொரு புதுத் திரைப்படத்தின் பாடல்கள் வெளியாகும் போதும், அதன் இசை டாரெண்ட் நெட்வொர்க்கில் உடனே கிடைத்துவிடும்.

ஒரு படத்தை உங்கள் கணினியில் சில மணி நேரங்களிலேயே டவுன்லோட் செய்யலாம்.

இந்தத் தப்பில் தனிநபர் மாட்டிக் கொள்ள முடியாது. ஏனெனில், இது நண்பர்களுக்கு இடையேயான கோப்பு பரிமாறும் முறை என்பதால், எந்த நண்பர் அதைச் செய்தார் என்று கண்டுபிடிப்பது கொஞ்சம் அல்ல, நிறையவே கஷ்டம்.

வேண்டுமானால், இதுபோன்ற டாரெண்ட் நெட்வொர்க்குகளின் மேல் கேஸ் போடலாம். பல நாடுகளில், இப்படிப்பட்ட கேஸ்கள் இருக்கின்றன. பல டாரெண்ட்டுகளை இழுத்து மூடி மங்களமும் பாடியிருக்கிறார்கள்.

நம்ம ஊரில், நாட்டில், இதுபோன்ற காப்பி ரைட் விஷயங்களில் அரசிடம் போதிய வலுவான சட்டங்கள் இல்லை. அதனால்தான், ஒவ்வொரு புதிய படத்தையும் வெளியான அன்றிரவே வீட்டிலிருந்தபடி பார்த்துவிட முடிகிறது!

– ஸ்ரீகாந்த்

# நல்மரபுகளின் நாயகி

**சதாசிவ பதிவ்ரதா** - சதாசிவனாக இருக்கக்கூடிய அனுக்ரஹ தெய்வத்தின் பதிவ்ரதையாக விளங்குபவள் லலிதாம்பிகை.

நாம் எளிதில் புரிந்துகொள்வதற்காகச் சில விஷயங்களைப் பிரித்துப் பார்க்கிறோமே தவிர, எல்லாவற்றையும் மீறி ஒரே பரம்பொருள்தான் - பரமாத்மாதான் இருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும். சிவம் என்பது நிர்க்குண பிரம்மம். அந்த நிர்க்குண பிரம்மத்திலிருந்து அம்பாள் தோன்றினாள். ஐந்து தொழில்களைச் செய்யக்கூடிய ஐந்து தேவர்களை சிருஷ்டி செய்தாள். அவற்றுள் அனுக்ரஹ தேவதைக்கு சதாசிவம் என்று பெயர். அம்பாள் சதாசிவ பதிவ்ரதை என்று சொன்னால் என்ன அர்த்தம்? அம்பாளும் அனுக்ரஹ தேவதையாக இருக்கிறாள் என்று ஆகிறது. பக்தர்களுக்கு அனுக்ரஹம் செய்பவளாக அம்பிகை இருக்கிறாள்.

சைவ சித்தாந்த மரபிலே, அனுக்கிரஹ தொழிலை 'சக்திநிபாதம்' என்றே சொல்வார்கள். ஒருத்தருக்கு அனுக்கிரஹம் கிடைக்கிறது என்றால், அது சக்தியிடமிருந்து பொழிந்து வருகிறது. அனுக்ரஹ தேவதையான சதாசிவத்தையே அனுக்ரஹம் செய்ய வைப்பவள் அம்பிகைதான்.

**சம்பிரதாயேசுவரி** - சம்பிரதாயங்களுக்கு ஈசுவரியாக இருக்கக்கூடியவள். சம்பிரதாயம் என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம்? சதாசிவ பதிவ்ரதா-வுக்கு முன் வரும் ஒரு திருநாமத்தை இதற்கு நாம் பார்க்க வேண்டும்: **சர்வோபாதி விநிர்முக்தா** - என்பது அந்தத் திருநாமம். சர்வ - உபாதி - விநிர்முக்தா - அதாவது எல்லா உபாதிகளுக்கும் அப்பாற்பட்டு இருக்கக்கூடியவள் என்று பொருள். அவளேதான் சம்பிரதாயங்களுக்கும் ஈசுவரியாக இருக்கிறாள்.

வழி வழியாகச் செய்துவரும் ஒன்றை நாம் சம்பிரதாயம் என்று சொல்லுவோம். ''இது எங்க வீட்டுச் சம்பிரதாயம்'', 'இது எங்க சமூகத்துச் சம்பிரதாயம்' என்றெல்லாம் சொல்லக் கேட்டிருக்கிறோம். ''நாற்பது வருஷமா இதுதான் வழக்கம்...'' என்போம். வழக்கம் என்பது எப்படி வந்தது...?

### பழக்கமும் வழக்கமும்

தமிழில் இரண்டு வார்த்தைகள் உண்டு. ஒன்று, வழக்கம்; மற்றொன்று பழக்கம். இந்த இரண்டையும் சேர்த்தேதான் அடிக்கடி பயன்படுத்துவோம் - ''பழக்க - வழக்கம்'' என்று சொல்லுவோம். இரண்டுக்கும் இடையே என்ன வித்தியாசம்...? இரண்டும் ஒன்றுதானா? அல்லது வேறுபாடு ஏதேனும் உண்டா?

எழுத்து ரீதியாக 'ப'கரம் 'வ'கரம் மாறி வருகிறது என்பது மட்டுமே வேறுபாடு அல்ல. இந்தச் சொற்களுக்கு அர்த்தத்தைத் தேடிப் பிடித்தோமானால், அதில் இருக்கிற சிறிய சூட்சுமம் நமக்குப் புரியும். தனி மனிதர்கள் தொடர்ந்து சில விஷயங்களைச் செய்யும்போது அது




ஸ்ரீ லலிதா

நான்காம் பாகம்

சுதா சேஷய்யன்

அவருடைய பழக்கம் - habit. ஒரே விஷயத்தைத் திரும்பத் திரும்பத் திரும்பச் செய்கிறது பழக்கம்.

ஒரு சமுதாயத்திலே இருக்கக்கூடியவர்கள், ஒரு குடும்பத்தில் இருக்கக்கூடியவர்கள் - ஒருவர் மட்டுமின்றி அனைத்து உறுப்பினர்களும் செய்யக்கூடிய காரியமாக இருந்தால், காலப்போக்கில் அது என்னவாகும்...? அதே பழக்கம் பல குடும்பங்களுக்குப் பரவி, எல்லோரும் பண்ணுகிற காரியமாக அது மாறிவிடும். பல குடும்பங்களில் ஒரே மாதிரி வழக்கம் பரவப் பரவ, அது சமுதாயத்தின் **வழக்க**மாகவே ஆகிவிடும், தொடர்ந்து நீடித்து நிற்கும்.

ஆக, தனி நபர் ஒருவர் மாறாமல் கடைப்பிடிக்கும் செயல் என்பது பழக்கம்; நிறைய பேர் ஒரே விஷயத்தைப் பல ஆண்டுகளுக்கு, பல தலைமுறைகளுக்குச் செய்துவந்தால் அது வழக்கம். சொல்லும்போதே எப்படிச் சொல்லுவோம்...? "இருபது வருஷமா இதுதான் என்னோட பழக்கம்" என்போம். ஆனால் பொதுப் பழக்கத்தைக் குறிப்பிடும்போது, "இது எங்க சமுதாயத்து வழக்கம்; ஊர் வழக்கம்" என்றுதான் சொல்லுவோம்.

வழக்கம் - பல பேர் சார்ந்தது.

பழக்கம் - தனிநபர் சார்ந்தது.

சம்பிரதாயம் என்பது வழக்கத்தின் பாற்பட்டது. ஒருத்தரிடமிருந்து இன்னொருத்தருக்கு வழி வழியாக, வழி வழியாக, வழி வழியாக வந்து கொண்டிருக்கக்கூடிய முறை. ஒரு குருவிடத்திலிருந்து சிஷ்யர்களுக்குப் போய், அவர்களிடமிருந்து அடுத்து வரும் சிஷ்யர்களுக்குப் போய்... அப்படியே தொடரக்கூடியது.

### நல்லவையே நிலைக்கும்!

**சம்பிரதாயேசுவரி** என்றால், குருமுகமாக வந்துகொண்டிருக்கும் தர்மங்கள் இருக்கின்றனவே, அவற்றுக்குத் தலைவியாக இருக்கக்கூடியவள் என்று அர்த்தம். நல்ல விஷயங்கள் மட்டும்தான் குருவிடமிருந்து சிஷ்யருக்குப் பெயர்ந்து வரும். கெட்ட விஷயங்கள் வர மாட்டா. அவை வடிகட்டிப் போய்விடும். நல்ல விஷயங்கள் மட்டுமே உபதேசம் ஆகும். அந்த சிஷ்யன் தனது அடுத்த சிஷ்யனுக்கு உபதேசம் பண்ணுகிறபோது, உபதேச ரீதியாக வரக்கூடிய சம்பிரதாயத்தில் நல்ல விஷயம் தான் நிற்குமே தவிர, ஒத்துவராத விஷயங்கள் வெட்டுப்பட்டுவிடும்! அப்படிப்பட்ட நல்ல விஷயங்கள் - தர்மங்களுக்கு ஈசுவரியாக இருக்கக்கூடியவள் **சம்பிரதாயேசுவரி.**

### அக்ஷரங்களுள் உறைபவள்

**ஸாத்வீ** - இந்தத் திருநாமத்தை இரண்டாகப் பிரிக்கிற வழக்கம் உண்டு. சில

**தங்கள் மனத்தில் இருக்கக்கூடிய பரமாத்ம ஸ்வரூபத்தை அதிஷ்டானமாகப் பிரதிஷ்டை செய்து அதை தரிசிக்க வேண்டும்**

திருநாமங்கள், பாட பேதங்களுக்கு ஏற்ப மாறுபடும். சிலர் இந்தத் திருநாமத்தை இரண்டாகப் பிரிப்பார்கள்; சிலர் ஒன்றாகவே பயன்படுத்துவார்கள். இந்த இடத்திலே இரண்டாகப் பிரித்தால், வேறொரு இடத்தில் இரண்டாகத் தோன்றக்கூடிய நாமங்கள் ஒரே ஒரு திருநாமமாக எடுத்துக்கொள்ளப்பட்டு கணக்கு நேராக வந்துவிடும். பாடாந்திரத்துக்கு ஏற்ப சில மாறுபாடுகள் இருக்கும்.

**ஸாத்வீ** என்பதை **ஸாது** + ஈ என்ற இரண்டு திருநாமங்களாகப் பிரிப்பதுண்டு. **ஸாது** - ஸத் விஷயங்களுக்குத் தலைவியாக இருக்கக்கூடியவள். ஸாது என்ற சொல்லே இதனால்தான் ஏற்பட்டது. நல்ல விஷயங்கள் - ஸத் விஷயங்கள் - யாரிடம் இருக்கின்றனவோ, அவர் ஸாது. ஸத்

விஷயங்களின் தலைவி அம்பிகை என்பதால் ஸாது என்ற திருநாமம்.

ஈ - நான்காவது எழுத்து. அக்ஷர முகமாக அம்பாள் இருக்கிறாள். 51 அக்ஷரங்களிலேயும் அவற்றின் ரூபமாக அவளே இருக்கிறாள். அதனால்தான் அம்பாளின் பீடத்துக்கே அக்ஷர பீடம் என்று பெயர்.



ஒவ்வொரு அக்ஷரத்தையும் தனது பீடமாகக் கொண்டிருக்கிறாள். அவள் கொலுவிருக்கும் 51 அக்ஷரங்களுக்கும் சேர்த்தும் ஒரு பீடம் இருக்கிறது.

திருவாரூர் கமலாம்பிகை சன்னிதியில் வலம் வருகிறபோது ஒரு பீடத்தைப் பார்க்கலாம். அந்தப் பீடத்தில் எந்த ஸ்வரூபமும் இருக்காது! எப்படி திருப்பெருந்துறை சிவாலயத்தில் ஆவுடையார் மட்டும் இருக்கிறதோ அதுபோல் இங்கே பீடம் மட்டும் இருக்கும்.

ஆவுடையார் கோயில் என்றே திருப்பெருந்துறைக்கு ஒரு பெயர் உண்டு. அங்கே ஆவுடைக்கு மேலே லிங்க பாணம் இருக்காது.

இதற்கு என்ன அர்த்தம்...? அந்தக் கோயிலில் போய் தரிசனம் பண்ணுகிறபோது, அந்த ஆவுடையார் மீது அவரவரும் தங்கள் மனத்தில் இருக்கக்கூடிய பரமாத்மா ஸ்வரூபத்தை அதிஷ்டானமாகப் பிரதிஷ்டை செய்து, அதை தரிசிக்க வேண்டும் என்பதுதான். அதேமாதிரிதான் கமலாம்பாள் சன்னிதியில் பிரதக்ஷிணமாக வருகிறபோது அங்கே காணப்படும் 51 அக்ஷரங்களும் சேர்ந்த பீடத்தில், அவரவர்களும் தங்கள் மனத்திலே அந்தரியாக இருக்கக்கூடிய, குஹ்ய ரூபிணியாக இருக்கக்கூடிய, குஹாம்பாவாக இருக்கக்கூடிய அம்பாளை ஆவாஹனம் செய்து தரிசிக்க வேண்டும்.

அந்த அக்ஷரங்களிலே ஈகாரத்துக்குத் தனிச் சிறப்பு உண்டு. முதல் அக்ஷரமான 'அ'கரம் விஷ்ணுவினுடைய அக்ஷரம். விஷ்ணுவின் சகோதரியான அம்பாளுக்கு உரிய அக்ஷரம் 'ஈ' என்கிற நான்காவது அக்ஷரம். இவை இரண்டுமே 'ஸ்திதி' என்கிற காக்கும் தொழிலுக்குரிய அக்ஷரங்கள். அதனால்தான் அம்பிகைக்கு 'ஈ' என்று ஒரு திருநாமம்.

**(வளரும்)**

# என்ன கலர் சட்டை போடலாம்?

## நெட் ஜோசியம்

ஜோதிடம்தான் இப்போது இன்டர்நெட்டில் ரொம்ப பாப்புலர். பலர் ஆங்கிலத்தில் பலன் எழுதுகிறார்கள்.

தமிழில் பலன் எழுதி, வாசகர்களின் சந்தேகங்களுக்குப் பதில் சொல்லி, பரிகாரங்கள் சொல்லி, தமிழ் இணைய உலகில் பிரபலமானவர் வேதா கோபாலன். அவருடன் ஒரு ட்விட்டர் பேட்டி:

**ஆன்லைன் ஜோதிடம், நேரடி ஜோதிடம் என்ன வித்தியாசம்?**

''ஆன்லைனில் எழுத்து மூலம் சொல்வதால் பொறுப்பு அதிகம்.''

**கேட்டவர்களே திரும்பத் திரும்ப வருவார்களா?**

''வருவார்கள். 14 முறை, 20 முறை, 24 முறை வந்து கேட்டவர்கள் எல்லாம் உண்டு.''

**அப்படி என்னதான் கேட்பார்கள்?**

''வழக்கமா, திருமணம், பணம் சம்பந்தமா நிறைய கேட்பாங்க. ஆனால் போன வருஷம் முழுவதும் வேலை பற்றித்தான் நிறைய கேட்டார்கள்.''

**வெளிநாட்டினர் அதிகம் கேட்பார்களா?**

''இலங்கைத் தமிழர்கள் அதிகம் கேட்பார்கள். அவர்களுக்கு ஜோதிடத்தில் நிறைய நம்பிக்கை. அதேபோல் முஸ்லிம்களும் கிறித்துவர்களும் நிறைய கேட்பாங்க.''

**இந்தியாவில் இருந்து வருமா?**

''மதுரை, திருநெல்வேலியைச் சேர்ந்தவர்கள் நிறைய கேட்பார்கள். அவர்களில் பலரும் வெளிநாடு போயிருப்பவர்கள்.''

**வெளிநாட்டினர் கேள்விகள் எப்படி இருக்கும்?**

''ரெண்டு கேள்விகள் மிக முக்கியமானவை. ஜாப் விசா கிடைக்குமா? கிரீன் கார்டு எப்போ கிடைக்கும்?''

**எந்த வயசுக்காரங்க கேட்பாங்க?**

''24 முதல் 30 வயசு வரை இருப்பவர்களிடம் இருந்துதான் நிறைய கேள்விகள் வரும். பல நாடுகளில் இருந்து 18 வயசுப் பசங்க எல்லாம்கூட ஜோசியம் கேட்பாங்க.''

**பெண்கள் கேட்பார்களா?**

''ஆண்கள்தான் அதிகம். 'இண்டர்வியூ போறேன். என்ன கலர் சட்டை போட்டுக்கணும்?'னுகூட கேட்பாங்க.''

**ஜோதிடத்தை எவ்வளவு சீரியஸ்ஸா எடுத்துக்கறாங்க?**

''ரொம்பவே. சொல்லும் ஒவ்வொரு வார்த்தையையும் அப்படியே பின்பற்றுவாங்க.''

**ஆன்லைன் ஜோதிடம் - பிரச்னைகள் இல்லையா?**

''ரெண்டு பிரச்னைகள் உண்டு. ஒன்று பலன்கள் ஆத்தண்டிக்கா இருக்கணும். இல்லன்னா, குதி குதின்னு குதிப்பாங்க. அடுத்தது ஒரு ஜோசியரையும் இவங்க விடமாட்டாங்க. இன்னும் நாலு பேர்கிட்ட போய் அதே கேள்வியைக் கேட்பாங்க. நம்பிக்கையைப் பெறுவது அவ்வளவு சுலபமில்லை.'' ●

## விரல் நுனியில்...

# பாக்கெட்டில் லைப்ரரி!




* கணேஷ் ராம்

இன்டர்நெட்டில் எதை வேண்டுமானாலும் செய்யலாம், மக்களுக்குப் பயன் படும்படி எப்படி வேண்டுமானாலும் செய்யலாம் எனச் சொல்லாமல் தங்களது புதுமையான 'மொபைல் வேதா' மூலம் செய்துகாட்டி வருகிறார் கணேஷ் ராம். அது என்ன 'மொபைல் வேதா'? பெயரில் உள்ள புதிரை, கேள்வியாய் அவர் முன் வைத்தோம்.

'வேதம் என்றாலே நம் அனைவருக்கும் தெரியும். அது ஒரு அற்புதமான, புனிதமான அறிவூட்டும் ஒப்பற்ற நூல். இரண்டு வருடங்களுக்கு முன் நானும் எனது நண்பர் சரவணனும் செல்தொலைபேசியின் அபார வளர்ச்சியைப் பற்றி ஒரு சமயம் வியந்து பேசிக் கொண்டிருந்தோம். அப்பொழுதுதான் 'மொபைல் வேதா' இணைய தளத்தை உருவாக்கும் யோசனை எழுந்தது. அதற்குச் செயல் வடிவம் கொடுக்கும் விதமாய் VIT பல்கலைக்கழகத்தில் நான் மேற்படிப்பு முடித்த உடன் 2007ஆம் ஆண்டு மொபைல் பப்ளிஷிங் ஆரம்பித்தோம்.''


* சரவணன்

மொபைல் வேதாவின் மூலம் நீங்கள் சாதித்தது என்ன? சாதிக்கப்போவது என்ன?

"www.fublish.com என்ற இணைய தளத்தின் வழி அவரவர் மொபைல் மூலமாகவே இலவசமாக புத்தகங்களைப் படிக்கும் வசதியை மக்களுக்குச் செய்து கொடுத்துள்ளோம். இதுவரை பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் இதில் உறுப்பினர்களாகச் (இலவசமாக) சேர்ந்து 25,000 புத்தகங்களைத் தங்களது செல்போன்களுக்கு டவுன்லோட் செய்து கொண்டுள்ளார்கள். தமிழில் பல அரிய நூல்கள், சங்க இலக்கியங்கள் என ஏகப்பட்ட புத்தகங்கள் அணிவகுத்து நிற்கின்றன. எங்களது கனவு, லட்சியம் எல்லாம் ஒன்றே ஒன்றுதான் கிராமத்து மக்களுக்கும் சங்க இலக்கியங்களையும், தமிழ்ப் புத்தகங்களையும் எடுத்துச் செல்ல வேண்டும். அவர்கள் தங்களது செல்தொலைபேசியின் வழியாகவே எங்கிருந்தாலும், எந்த நேரத்திலும் தமிழை அதன் அழகும், பொருளும் மாறாமல் படித்து ரசித்துப் போற்ற வேண்டும். 2010 உலகத் தமிழ் மாநாட்டுக்கு முன் ஒரு மில்லியன் தமிழ் மக்களிடம் இந்த (இலவச) சேவையைப் புகுத்திட வேண்டும்'' என, கண்களில் தமிழ்க் கனவு மின்னப் பேசும் மொபைல் வேதாவின் ப்ரும்மாக்களை வாழ்த்தி விடைபெற்றோம்.

*செய்திச் சித்திரம் :*
நளினி சம்பத்குமார்

# பயாஸ்கோப்





**பா**னுசந்தரின் (அதாங்கே 'நீங்கள் கேட்டவை' ஹீரோ) மகன் ஜெயந்த் அறிமுகமாகும் படம்தாங்க மார்கழி 16. ''இந்தப் படத்தோட கதையில் பாதி நிஜம், பாதி கற்பனை'' என்கிறார் இயக்குனர் ஸ்டீபன். இவரது நண்பரின் வாழ்க்கையில் மார்கழி 16 அன்று நடந்த சம்பவம்தான் உண்மைக் கதையாம். ''மீதியை சினிமாவுக்காக எழுதியிருக்கிறேன்'' என்கிறார் இயக்குநர். சொல்லாமலே படத்தில் 'சொல்லாதே சொல்லச் சொல்லாதே' பாடலின் மூலம் அனைவரையும் திரும்பிப் பார்க்க வைத்த 'பாபி'தான் மார்கழி 16 படத்தின் இசையமைப்பாளராம்.

# மனசுக்குப் போட்ட மருதாணி!



**'அ**லிபாபா' படத்தில் காமெடியும், எமோஷனும் ஃபைட்டுமாகக் கலக்கிய கிருஷ்ணாவுக்கு 'கற்றது களவு' படத்தில் கிடைத்திருப்பது அதிரடி பண்ணும் ஆக்‌ஷன் வேடம். இந்தப் படத்துக்காக ராமேஸ்வரத்தில் எடுக்கப் பட்ட சேஸிங் காட்சிகளில் கிருஷ்ணாவுக்கு டூப் போட்டு காட்சியைப் படம்பிடிக்கத்தான் முதலில் இயக்குநர், தயாரிப்பாளர் தரப்பு முடிவு செய்ததாம். கிருஷ்ணா, ''எவ்வளவு ரிஸ்க் எடுக்கவும் தயார்; எனக்கு டூப் வேண்டாம்'' என்று சொல்லி ரிஸ்க்கை ரஸ்க் போல தூள்தூளாக்கி இருக்கிறாராம். ஜோடியாக நடிப்பது இயக்குநர் அகத்தியனின் சீமந்தபுத்திரி சாட்சாத் விஜயலட்சுமி. அப்ப ரிஸ்க் எடுப்பதில் தவறில்லை.



கோடம்பாக்கம் ஒத்து வராதென தமது சொந்த தேசத்தில் (குஜராத்) திறமை காட்டப் போன நடிகை கிரணை, மீண்டும் கோடம்பாக்கத்தில் கோலோச்சக் கூட்டி வந்திருக்கிறார் இயக்குநர் கம் தயாரிப்பாளர் ஷக்தி சிதம்பரம். படம் குரு சிஷ்யன். ஒரே ஒரு கண்டிஷன்தானாம். என்ன என்கிறீர்களா? எவ்வளவு திறமை காட்ட முடியுமோ அவ்வளவு திறமை காட்டினால், அடுத்தடுத்த படங்களில் வாய்ப்பு வரும் என்பதுதானாம். இந்தப் படத்தில் சுந்தர்.சிக்கு, நம்பர் 2 ஹீரோயினாக நடிப்பதில் சற்றே வருத்தம் என்கிறது கோலிவுட் பட்சி.



"அண்ணன் - தங்கை பாசத்தை முன்னிறுத்தும் மற்றுமொரு பாசமலர்'' என்று மருதாணி படத்தின் கதையை ஒன் லைனில் சொல்கிறார் இயக்குநர் வி.ஆர்.பிரதாப். டாக்டர் ராஜசேகரை சவால்விடும், அடிதடி ரோல்களில் பார்த்துப் பழக்கப்பட்ட தமிழ் ரசிகர்கள் இந்தப் படத்தில் எமோஷனல் சேகராகப் பார்க்கலாமாம். சேகருக்குத் தங்கையாக நடிப்பது, 'கிசுகிசு புகழ்' மீரா ஜாஸ்மின் தான். அப்படின்னா அண்ணன் ராஜசேகர் அறியாயத்துக்கு எமோஷனல் ஆகலாம்; தப்பில்லை.



'மானாட மயிலாட' நிகழ்ச்சியில் டான்ஸ் ஆடியதால், சைதன்யாவுக்கு 'சோக்காலி' படத்தில் ஹீரோ வேஷம் கட்ட வாய்ப்பு கிடைத்திருக்கிறது. உன்னை அடையாமல் விட மாட்டேன் என்கிற பெண்ணும், உன்னை அடைவதைவிட உயிரைவிடுவதே மேல் என்று மோதிக்கொள்ளும் ஆணும் ஒரு புள்ளியில் சந்தித்தால், நிகழும் பரபர களேபரங்கள்தான் கதையாம். திரைக்கதையும் அப்ப பரபரன்னு இருக்கணுமே...



# நெட் குண்டர்கள்!

இணையத்தில் இன்று எந்தத் தகவலை வேண்டுமானாலும் உடனடியாகப் பெற்றுவிடலாம் என்பது எல்லோருக்கும் தெரியும். அதில் வேண்டியது உண்டு. வேண்டாததும் உண்டு. வேண்டாததுதான் இன்னும் அதிகம்.

பாமரர் முதல் பிரபலம் வரை பயப்படுவது இந்த வேண்டாததைக் கண்டுதான்.

எங்கே எல்லாம் நடிகைகளின் பெயர்களை ரிப்பேர் பண்ணமுடியுமோ அங்கே எல்லாம் புகைப்படங்களோடு, வீடியோ காட்சிகளோடு ரிப்பேர் செய்ய இன்டர்நெட் குண்டர்கள் குண்டாந்தடியோடு காத்திருக்கிறார்கள்.

த்ரிஷாவின் குளியலறைக் காட்சி என்று சொல்லப்பட்ட ஒரு வீடியோ துண்டு இப்படித்தான் இன்டர்நெட்டில் பிரபலமானது. நயன்தாரா-சிம்பு முத்தக் காட்சி மற்றொரு உதாரணம். குழுக்களில் வளைய வந்தது போதாது என்று பலருடைய ஈமெயில்களிலும் தத்தித் தாவுகின்றன இக்காட்சிகள்.

பல சமயங்களில், அந்தந்த நடிகையர், நடிகர்களின் சம்மதமில்லாமல், ரகசியமாக எடுக்கப்படும் வீடியோ காட்சிகள் இன்டர்நெட் குண்டர்களால் வலையேற்றப்படுகின்றன.

அடுத்து காஞ்சி தேவநாத குருக்கள் ரேஞ்சுக்கு, தம் அனுபவங்களைத் தாமே வீடியோ எடுத்து, இன்டர்நெட்டில் வளையவிடுவது.

சவிதா பாபி என்றொரு இணைய தளத்தைச் சில மாதங்களுக்கு முன்பு இந்திய அரசு தடை செய்தது. ஆனாலும் பிரயோஜனமில்லை.

ஏராளமான வக்கிரங்களைப் பட்டியலிட்டுக்கொண்டு போகலாம். இதெல்லாம் எப்படி நடக்கின்றன?

ஒன்று சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரியாமல் நடப்பது. இன்னொன்று சம்பந்தப்பட்டவர்களே செய்வது. முதல் பிரச்னையைக்கூடக் கையாண்டு விடலாம். ஆனால், இரண்டாவதுதான் பயங்கரமானது.

தம்மைப் பற்றிய இத்தகைய 'வீரதீர' பிரதாபங்கள் வெளியாகவேண்டும் என்று விரும்புவது ஒரு நோயுற்ற மனநிலை.

எப்படியேனும் பிரபலமாகிவிட வேண்டும் என்ற அவசரம் எப்படிப்பட்ட வேலையையும் இழிவையும் செய்யத் தூண்டி விடுகிறது.



இத்தகைய ஆபாசக் காட்சிகளால் பலரின் பெயர் கெட்டுப் போகிறது. தன்மானமும் குடும்ப கௌரவமும் பாதிப்படைகின்றன.

நம்பிக்கைக்குரியவர்களைத் தவிர வேறு யாரையும் உங்களைப் புகைப்படம், வீடியோ எடுக்க அனுமதிக்காதீர்கள். நெட்டு கெட்டுக் கிடக்கு!

# ஆல்ஃபா மைண்ட் பவர்

ஆழ்மனதின் சக்தி!



**ALPHA™ MIND POWER**

"Unwind Your Mind & Empower Yourself"

**மனோ சக்தி நிபுணர் டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்**
அளிக்கும் இந்தியாவின் பழம்பெரும் சித்தர்களின் சக்தியுடன் கூடிய
ஒரு நாள் ஆல்ஃபா தியான பயிற்சி



- மன அழுத்தம் குறைக்க
- பண வரவை அதிகரிக்க
- உறவுகளைச் சீர்படுத்த
- குடும்பத்தில் அன்பு நிலைச் செய்ய
- நோய் தீர்க்க, நிம்மதியாக தூங்க,
- பரீட்சையில் அதிக மார்க் வாங்க,
- மகிழ்ச்சியுடன், தன்னம்பிக்கையுடன், வெற்றியுடன் வாழ

தபால் மூலம் கற்கலாம்
ஆல்ஃபா மைண்ட் பவர்
ஆடியோ சிடி மற்றும்
பயிற்சி புத்தகம்
ஆங்கிலம் மற்றும்
தமிழில் தபால்
மூலம் பெறலாம்.

**ஒரு நாள் பயிற்சி மட்டுமே!**

ஆர்.எஸ்.ஆர்.பிளாசா, 3வது தளம், 50, 51 ஆற்காடு ரோடு,
சாலிகிராமம், சென்னை - 600 093. இந்தியா
ஃபோன் :+91- 44 - 2376 0007, 2376 6555
மொபைல் : 98414 02000, 98412 72146, 98416 96664
e-mail : amp@alphamindpower.net www.alphamindpower.net

**ஆல்ஃபா தியான அனுபவம் இதோ ஒரு கடிதம்**

**ஜனவரி 2010**

10ஆம் வகுப்புவரை நன்றாக படித்து வந்த என் மகன் என்ன காரணத்தினாலோ 11ஆம் வகுப்புக்கு வந்தபின் படிப்பதே யில்லை. நான் ஆல்ஃபா தியான பயிற்சி யில் கலந்துகொண்டு அவனுடைய ஆழ்மனதுடன் பேசி அவன் முழு கவ னத்தையும் படிப்பில் செலுத்தும்படி சொல்லி வந்தேன். மேலும் 'வித்யா சித்தி' மாணவர்களுக்கான CDயை தினமும் கேட்கச் செய்தேன். இப் பொழுது அவன் எல்லா பாடங்களிலும் மிக நல்ல மதிப்பெண் பெறு கிறான். ஆல்ஃபாவிற்கு நன்றி! குருஜிக்கு நன்றி!

திருமதி மேகலா, தூத்துக்குடி

காணத்தவறாதீர்கள்!
ஜனவரி 5 மதியம் 12.05 மணிக்கு பொதிகை டி.வி.யில்
எமது நேரடி ஒளிபரப்பை கண்டு பயன்பெறுங்கள்.

**அடுத்த வரும் பயிற்சி வகுப்புகள்**

**பாண்டிச்சேரி : 10.01.2010**
**சென்னை : 24.01.2010**
**மதுரை : 07.02.2010**

---

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!



ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் தீமை உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திர முண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் **மறையகம் பாபா**. உடனே அணுகவேண்டிய முகவரி:

அருள்
# மறையகம்

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ.3, அப்துல் ரசாக் தெரு,
நூர்ஜஹான் தியேட்டர் எதிரில் (தற்போது ராஜ் தியேட்டர் என்று
மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை, சென்னை - 600 015.
☎ : 2435 1190, 2433 2047. செல்போன் : 98404 11551

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சனை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சனைகளை எழுதி, ரூ. 10 (அ) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.

10

**கா**தலைப் பொறுத்தவரை பல வேடிக்கையான கருத்துக்கள் நாளுக்கு ஒன்றாக முளைத்து வரு கின்றன. கொஞ்ச வருடங்களுக்கு முன் டைம் இதழில் காதல் அப்படி ஒன்றும் மகோன்னதமில்லை; அது வெறும் உடலில் ஏற்படும் கெமிஸ்ட்ரிதான் என்ப தாக யாரோ ஒரு வெள்ளைக்கார மேதை கட்டுரை எழுதியிருந்தான். பலருக்கும் அப் போது அதிர்ச்சியாக இருந்தது. ஆனால், சில வருடங்களிலேயே சூர்யாவுக்கும் ஜோதிகாவுக்கும் அந்தப் படத்தில் நல்ல கெமிஸ்ட்ரி எனச் சொல்லுவதற்கும் எழுது வதற்கும் பயன்பட்டதே தவிர, காதல் எப்போதும் போல பல இளைஞர்களை யும் இளைஞிகளையும் தொடர்ந்து ஆறு குளம் கிணற்றுக்கும் ரயில்வே

# பகல் மீன்கள்

ட்ராக்குகளுக்கும் துரத்திவந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால், கொஞ்சம் உயரத்துக்கு வந்து இந்த பூமியைச் சற்று குனிந்து பாருங்கள். எறும்புகளாகத் திரியும் இந்த மனிதக் கூட்டத்தில்தான் எத்தனை எத்தனை காதல் ஜோடிகள். ஆனால் அத்தனையும் ஒரே ஊர், ஒரே தெரு அல்லது ஒரே அலுவலகம் இப்படி யாகத்தான் இருந்து வருகிறது.

**இ**திலிருந்து கொஞ்சம் விலகி வித்தியாசமான ஒரு காதலைப் பார்க்கவேண்டுமானால், அப்படியே பார்வையைக் கொஞ்சம் கோடம் பாக்கம் ட்ரஸ்ட்புரம் பக்கமாகத் திருப்பி, இன்னும் சற்று கீழே குனிந்து கூர்ந்து பாருங்கள். ஒரு பெண் காதல் வேதனையுடன் தன் வீட்டு பால்கனியில் நின்று கொண்டிருப்பது தெரியும். அது வேறு யாருமில்லை; நம் தேன்மொழிதான். அவள் இப்போது காதல் வேதனையில் இருக்கிறாள். அவள் மனத் தைக் கெடுத்த சூர்யாவின் வீடு, வேறு எங்கும் இல்லை; ரொம்ப பக்கத்தில் கே.கே.நகரில்தான்.

இத்தனைக்கும் இருவரும் கடந்த சில நாட்களாக கோடம்பாக்கம் பாலத்தைத் தாண்டிதான் மவுண்ட் ரோட்டுக்குள் பிர வேசிக்கிறார்கள்.

என்ன... சூர்யா தன் வாகனத்தில் காலை 9.30க்குக் கடந்தால், தேன் மொழியின் ஹோண்டா சிட்டி கார் 11.30க்குப் பாலத் தைத் தாண்டும்.

இவள் எக்மோர் சிக்னலில் காத்திருக் கும் வேளையில் அவனை நினைத் தால், அதே நேரம் அவன் வள்ளுவர் கோட்டம் சிக்னலில் அவளை நினைத்த படி காத்திருப்பான்.

தேன்மொழியோ, அவன் உலகில் எந்த மூலையில் இருக்கிறானோ, இந்த நேரத்தில் என்ன வேலை செய்கிறானோ என நினைத்துக் கொண்டிருப்பாள். இன் றோடு மூன்று வாரமாகிவிட்டது, வைசாக் ரயில் நிலையத்தில் முதலும் கடைசியுமாக அவனைப் பார்த்து. இன்று வரை அவனை நினைக்காத நாளில்லை.

இதற்கிடையில் உலகம் எத்தனையோ முறை சுற்றிவிட்டது. ஆனாலும் தேன்

மொழிக்கு அவன் நினைப்பு மட்டும் மாறவில்லை.

ஒருமுறை இருவரும் ஒரே சிக்னலில் மாட்டிக் கொண்டனர், எதிர் எதிர்த் திசையில்.

இருவருடையதும் வரிசையில் முதல் வாகனம். தேன்மொழி சற்று கூர்ந்திருந்

அஜயன் பாலா



தால் அவனைப் பார்த்திருக்க முடியும்... என்ன செய்வது... அந்த நேரம் பார்த்து எஃப்.எம்.மில் தன் தோழியின் குரலைக் கேட்பதில் கவனத்தை ஈடுபடுத்தியிருந்தாள்.

இடையில் நடந்த மூன்று சம்பவங்கள் அவளை மிகவும் உசுப்பேற்றிவிட்டன.

முதலாவது சம்பவம், கடந்த வாரம். கார் எடுத்துக்கொண்டு லஸ்ஸில் இருக்கும் கிரிஜாவின் விளம்பர நிறுவனத்துக்கு ஒரு டிஸ்கஷனுக்காகப் புறப்பட்டாள், பாண்டிபஜாரில் ஒரு சிக்னலில் அவளுக்கு முன்னால் பைக்கில் ஒருவன்... உண்மையில் அவன் யாரோ... ஆனால் முதுகைப் பார்த்தால் அவனைப் போலவே இருக்கவே, தேன்மொழிக்குள் உயர் அழுத்த மின்சாரம் பாய்ந்தது. அவன் சட்டென டிராஃபிக் விதிகளை மீறிப் பாய்ந்து செல்ல, இவளும் விதிகளை நொறுக்கி, அவனைத் துரத்திப் போய் வேகமாய் ஓவர்டேக் பண்ண முயற்சிக்க, அவன் அந்த நேரம் பார்த்து வண்டியை குளோபஸ் வளாகத்துக்குள் திருப்பினான். விடுவாளா... என்னதான் ஆகிறது பார்த்து விடுவோம் என இவளும் காரை குளோபஸுக்குள் திருப்பி பார்க் பண்ணி, அவசரமாகப் படியேறி சீருடை சேவகன் சலாமைப் புறக்கணித்து கண்ணாடிக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்தாள்.



அரக்க பரக்க கண்கள் அலைந்தன.

ஆண்களின் உடை பக்கமாகச் சென்றாள். கவுண்டரில் பார்த்தாள். ஆளைக் காணவில்லை.

''சிவப்பு கலரில் டி-ஷர்ட் போட்டுக் கொண்டு ஒருவர் வந்தாரே... போய் விட்டாரா?''

கவுண்டரில் டை கட்டியிருந்த மொட்டைத் தலையனிடம் கேட்டாள்.

''ம்ம்... ஐ டிடிண்ட்...'' அவன் புருவங்களை நெருக்கினான்.

அவன் மொட்டையில் குட்டலாம் போலிருந்தது.

இதில் கொஞ்சம் வேதனையாகிப் போன அவள் அன்று முழுக்க கிஷோர் குமாரின் பாடல்களைக் கேட்டு அவன் நினைவிலேயே அன்றைய பொழுதைக் கழித்தாள். கிஷோரின் குரலும் அவனது குரலும் ஒரு வகையில் ஒத்துப் போவதாக அவள் நினைப்பு.

போதாக்குறைக்கு அன்று பார்த்து மழை வேறு.

அன்று இரவே டி.வி.யில் காதல் கோட்டை படம். சொல்லவேணுமா? இதற்கு முன் பத்துமுறை டி.வி.யிலேயே பார்த்திருப்பாள். ஆனால் இந்த முறை பார்க்கும்போது நிலைமையே தலைகீழ். அஜித் வேறு யாருமில்லை, சாட்சாத் அவனேதான். அதே நிதானம்... பொறுமை... போதாக்குறைக்கு படத்திலும் ரயில் வேறு. சொல்லவா

மறக்க முடியுமா, சமூம் போன்று உண்மைச் சம்பவங்களை மையமாக வைத்துத் தொடர் இயக்கிய கவிதாபாரதி முதல்முறையாக வித்தியாசமான காதல் தொடரை 'வண்ணம்' என்ற பெயரில் பாலிமர் டி.வி.யில் இயக்கவுள்ளார். ''நமது நாட்டில் காதல், திருமணம் போன்றவை இதில் சம்பந்தப்பட்ட ஆண், பெண் தொடர்புடைய விஷயம் மட்டும் இல்லை. குடும்பம், உறவுகள், சமூகம் என்று பல மனிதர்களின் பங்களிப்பும் திருமணம் செய்து கொள்ளும் ஆண் பெண்ணின் வாழ்க்கையில் அவசியமாகிறது. காதல் என்ற பெயரில் கணநேரத்தில் எடுக்கும் முடிவுகளால் ஏற்படும் நெகட்டிவ் சைடைக் காட்டுவதே இந்தத் தொடரின் நோக்கம்'' என்கிறார் இயக்குநர்.

வேணும்... ஒவர் நைட்டில் விஜய் கட்சியிலிருந்து அஜித் கட்சிக்கு மாறிப் போனாள்.

தேவயானி போல புடைவை கட்டிக் கொண்டு ஹாலில் திரிந்தாள். புடைவை இடுப்பிலிருந்து நழுவி நழுவி விழுந்தது.

ஓரகசத்தனமாக லேப்டாப்பில் இணையதளத்தில் கூகுளில் அஜித் ஃபேன்ஸ் என அடித்துப் பார்த்தாள். புகைப்படங்களில் தேடினாள். ஆர்குட்டுக்குச் சென்று இரவு முழுக்க ராம், ஷங்கர், மார்டின், ஷகீல் என அவளாக பல பெயர்களைப் போட்டு அவனை இரவு முழுக்கத் தேடினாள்... ம்ஹூம் அவன் கிடைக்கவே இல்லை.




அருணாச்சலம் மகள் குறித்து தன் அலுவலக இளவரசனான உதவியாளன் வினோத்திடம் ஒரு மாலை நேரத்தில் பால்கனியில் பேச ஆரம்பித்தார்.

''ஒரே பெண் அவள்தான். எனக்கு எல்லாம்... ரொம்ப நல்லவ. ரொம்ப புத்திசாலி. அதுதான் ப்ராப்ளம். அவளால எந்த ஆண் கூடவும் நெருங்கிப் பழக முடியாது. லவ் பண்ணவும் தெரியாது. ஆனால் மனசுக்குள்ள ரொம்ப நேசிப்பா. அதை மனசுக்குள்ள போட்டு, தனக்குத் தானே குழப்பிக்கிட்டு இருப்பாளே தவிர, அதை வெளிப்படுத்தத் தெரியாது. காலேஜ் டேஸ்ல ஒருத்தனை இப்படி லவ் பண்ண ஆரம்பிச்சு அவனைக் கன்னாபின்னான்னு அலையவிட்டு கடைசியில அவனுக்கே நோ சொல்லிட்டா. அவங்களுக்குள்ள என்ன ப்ராப்ளமோ தெரியலை.

ஆனா அதுக்கப்புறம் அவ சூன்யம் பிடிச்ச மாதிரி ஆயிட்டா. கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆயிடுச்சு. இப்பதான் கொஞ்சம் வெளியே வந்து பழையபடி ஹேப்பியா இருந்தா... இப்ப மூணுவாரமா திரும்பவும் பழைய மாதிரி பிஹேவ் பண்றா. எனக்குத் தெரியும். அவளால யார் கூடவும் ஒத்துப்போக முடியாது.

என்ன பண்றதுன்னு தெரியலை. ரொம்ப பயமா இருக்கு வினோத்.

அவளை மாத்தணும். என்ன பண்ணலாம்?''

''கவலைப்படாதீங்க பாஸ்... நான் இருக்கேன்.''

''எப்படிப்பா?''

''முதல்ல உங்க பொண்ணைப் பத்திக் கவலைப்படறதை விடுங்க. அவங்களை விட உங்களுக்குத்தான் டிப்ரஷன் ஜாஸ்தி.''

அருணாச்சலம் சிரித்தார்.

''சரி சார்... அவங்க இப்ப எங்க இருக்காங்க... நான் அவங்ககிட்ட பேசி அவன் அட்ரஸை முதல்ல வாங்கறேன்''

''நேத்து நைட்டுதான் ஊட்டிக்கு அவ ஃப்ரெண்டோட விளம்பரப் பட ஷூட்டிங் குன்னு சொல்லிட்டுப் போனா. சரி அவனோட அட்ரஸை வாங்கி என்னப்பா பண்ணப் போற?''

''வேற என்ன சாம பேத தான தண்டம் தான்''

''இல்லை வினோத்... எனக்கு அவங்களைப் பிரிக்கிறதுல இஷ்டமில்லை.''

''என்ன சார்... அப்புறம் எதுக்குக் கஷ்டப்படணும்... விட்டுட்டுப் போக வேண்டியதுதானே?''

''இல்லை அவன்கிட்ட பேசி எப்படியாவது அவளைப் புரிஞ்சு அட்ஜஸ்ட் பண்ணிக்கச் சொல்லணும்.

ஆமாப்பா, அப்படி இல்லைன்னா ரெண்டு பேரோட வாழ்க்கையும் பாழாயிடும்.

தேன்மொழி ரொம்ப லவ் பண்ணிடுவா. அப்புறம் அவனை டெஸ்ட் பண்றேன்ற பேர்ல டார்ச்சர் பண்ணி, கடைசியில அவனே இவளை வெறுக்கறா மாதிரி பண்ணிடுவா. அவனைப் பிரிஞ்சு இவளும் டிஸ்டர்பாகிடுவா... அதுக்கப்புறம் அவ முகத்தைப் பாக்கணும் விநோத்... பேய் பிடிச்சா மாதிரி ஆயிடும். அதனாலதான் சொல்றேன். இது கொஞ்சம் சென்சிடிவான விஷயம். ஏற்கெனவே எம் பொண்ணு முகத்தை இப்படி நான் பாத்துட்டேன். இன்னொரு முறை அவளை நான் அப்படி பார்க்க விரும்பலை.

**எந்த ஆண் கூடவும் நெருங்கிப் பழக முடியாது... ஆனால் மனசுக்குள்ள ரொம்ப நேசிப்பா.**

அதனாலதான் ஒண்ணு அவ இந்த லவ்லருந்து ரிலீவ் ஆகணும்... இல்லை அவன் என் பொண்ணைப் புரிஞ்சுக்கிட்டு வளைஞ்சு கொடுத்து சரண்டர் ஆகி கல்யாணம் பண்ணிக்கணும். கல்யாணமாகிட்டா அப்புறம் என் பொண்ணு சரியாகிடுவா.''

விநோத் தன் பாஸ் சொல்வதைக் கேட்டுத் திகைத்து நின்றான்.

''சரிங்க பாஸ் இப்ப எனக்குப் புரிஞ்சிடுச்சு.''

''இதுல இன்னொரு விஷயம் இருக்கு. அவன் யாரு... என்ன வேலை செய்யறான்னு இவளுக்கே இப்ப தெரியாது. அதுதான் அவ லவ்ல இவ்ளோ டீப்பா இருக்கறதுக்குக் காரணம்.

இரண்டாவது தடவை அவ அவனை இன்னும் பார்க்கலை. அப்படி பார்க்காத வரைக்கும் நமக்கும் வேலையில்லை. இரண்டு பேரும் அப்படி திரும்பவும் சந்திச்சுக்கிட்டாதான் பிரச்னையே...''

இதனைச் சொல்லிவிட்டு அருணாசலம் குழந்தை போல சிரிக்கத் தொடங்கினார்.

''அதுவரைக்கும் உனக்கு வேலையில்ல...''

இப்படி அவர் சொல்லிக் கொண்டிருக்கும் அதே கணத்தில் தேன்மொழி சூர்யாவின் இரண்டாவது சந்திப்பு நடந்தது. நடந்த இடம் ஊட்டியிலிருந்து குன்னூர் செல்லும் சாலையில்.

தேன்மொழியால் அதனை நம்ப முடியவில்லை. அப்போது அவள் தன் தோழி கிரிஜாவின் விளம்பரப் படப்பிடிப்பில் அசிஸ்டெண்டாக, பரபரப்பாக வேலை செய்து கொண்டிருந்தாள்.

**(மீன்கள் துள்ளும்)**



**எச்சரிக்கை**

**உ**ங்கள் இமெயிலின் பாஸ்வேர்டை மற்றவர்களிடம் தராதீர்கள். அப்படி தரவேண்டிய சூழல் ஏற்பட்டால், வேலை முடிந்தவுடன், வேறு பாஸ்வேர்ட் மாற்றிக்கொள்வது உத்தமம்.

# வாக்சக்தி

வேறு எந்த பிராணி வர்க்கத்துக்கும் இல்லாமல் மனுஷ்ய ஜாதி ஒன்றுக்குத்தானே வாக் சக்தி என்று ஒன்றைப் பராசக்தி கொடுத்திருக்கிறாள்? அவளுடைய Special gift என்றால் அது முக்கியமானதுதானே? நல்லறிவு இருந்தால், அது (பேசும் திறன்) நம்மைப் பரம ச்ரேயஸில் சேர்க்கவே கொடுக்கப்பட்டுள்ளது என்று புரிந்துகொண்டு அந்த வகையில்தான் அதைப் பிரயோஜனப்படுத்திக் கொள்ளத் தோன்றும். அவள் கொடுத்த வாக்கை அவள் விஷயமாகவே பிரயோஜனப்படுத்தி அவளையே அடைய வேண்டும் என்பதுதான் வாக்கின் பரம லக்ஷ்யம்.

வாக்கின் உயர்வு எதில் என்றால், ஒருத்தன் தான் மாத்திரம் உசந்த அனுபவங்களைப் பெறுவது என்றில்லாமல் பிறத்தியாருக்கும் அவை கிடைக்கும்படிப் பண்ணும் மிக உயர்ந்த தொண்டு அதனால்தான் நடக்கிறது. "சேர வாரும் செகத்தீரே!"* என்று தன்னுடைய ஒரு குழந்தை மற்ற குழந்தைகளையும் கூப்பிட்டுக் கூப்பிட்டு திவ்ய அனுபவங்களை, திவ்யமான அழகுகளை, உசந்த எண்ணங்களை, 'ஷேர்' பண்ணிக் கொள்ள வழியாகவே அம்பாள் வாக் சக்தி, கவித்வ ப்ரதிபை முதலியவற்றை வழங்குகிறாள். இதைவிட என்ன புண்ணியம் உண்டு? அதனால்தான் இதை Special gift என்று விசேஷித்துச் சொல்வது.

ஸாதனா மார்க்கம் என்று ஒரு குரு போட்டுக் கொடுக்கும்போது அதில் எத்தனையோ கடினமான கட்டுப்பாடுகள் இருக்கின்றன. அந்த சாதனை லக்ஷ்யத்தையே ஒரு கவி, சகல ஜனங்களும் செளக்யமாக, சந்தோஷமாகப் பெறும்படி சுவாரஸ்யமுள்ளதான பொருளில் பாட்டாக்கிக் கொடுத்து விடுகிறான்! இப்படி ஒரு அநுக்ரஹம்-தனி ஆசாமியின் உடைமையாயில்லாமல், எல்லோருக்குமான சோஷலிஸ உடைமையாக - வாக்கைக் கொண்டு அம்பாள் பண்ணுவிக்கிறாள் என்பதாலேயே அதைப் போற்றிப் போற்றிச் சொல்லியிருக்கிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

* காகம் உறவு' எனும் தாயுமானவர் பாடல்.

# Don't Worry...

**டோண்டு ராகவன். தமிழ் வலைப்பதிவு உலகத்தில் மிகவும் பிரபலமான பெயர். அவருடைய எழுத்தை விட, முகம் தெரியா ஒரு மனிதனால் அவர் இணையத்தில் பட்ட ரணங்களுக்காகவும் வேதனைகளுக்காகவும் அதிகம் அறியப்படுபவர். இங்கே அவரே தம் அனுபவங்களைப் பகிர்ந்துகொள்கிறார்.**

''நான் ஓய்வு பெற்ற அரசு பொறியாளன். பிரெஞ்சு, ஜெர்மன் மொழிகளைப் படித்தவன். மொழிபெயர்ப்பையே தொழிலாக வைத்துக்கொண்டு இருப்பவன். பல ஆண்டுகள் தில்லிவாசி. இணைய ஆர்வம் என்னையும் ஒரு நாள் தீண்டியது. அதுவும் தமிழில் எழுத வேண்டும் என்ற உந்துதல். என்னுடைய வலைப்பதிவை 2004ல் தொடங்கினேன். இவ்வளவு துன்பங்களுக்கும் வருத்தங்களுக்கும் நான் ஆளாவேன் என்று தெரியவில்லை.

வழக்கம் போல் என் மொழிபெயர்ப்பு அனுபவங்கள், என் சின்ன வயது அனுபவங்கள், கருத்துகள் என்று எழுதிவந்தேன். எண்ணற்றோர் என் பதிவுகளுக்குப் பதில் தந்து, ஊக்குவித்து, என் எழுத்தை மெச்சினார்கள். நானும் பலருடைய வலைப்பதிவுகளில் போய் என் கருத்துகளை அவர்களோடு பகிர்ந்துகொண்டேன்.

மே 2005. வழக்கம்போல் நான் மற்ற நண்பர்களின் வலைப்பதிவுகளைப் படித்துக்கொண்டிருந்த போது, முகமூடி என்ற நண்பரின் வலைப்பதிவைப் பார்த்தேன். அவர் எழுதியிருந்த ஒரு பதிவுக்குக் கீழே டோண்டு என்ற என் பெயரில் ஒரு மோசமான, அருவருப்பான கமெண்ட் எழுதப்பட்டிருந்தது. படித்துப் பார்த்தவுடன், அதிர்ச்சியால் துடித்துப் போனேன்.

சம்பந்தமே இல்லாமல், யாருடைய வம்புக்கும் போகாத என்னை யாரோ குறிவைத்திருக்கிறார்கள் என்று என் உள்மனம் சொன்னது. எதற்கு என்னைக் குறிவைத்திருக்கிறார்கள்? யார் வைத்திருக்கிறார்கள்? தெரியவில்லை.

உடனடியாக என் நண்பர்கள் அனைவருக்கும் கடிதம் எழுதி, இப்படி ஒரு சம்பவம் நடந்திருப்பதைத் தெரிவித்தேன். 'நான் இதைச் செய்யவில்லை,



## இணைய அபாயங்கள்!

# டோண்டு!

என் பெயரில் யாரோ விளையாட நினைக்கிறார்கள், ஜாக்கிரதை' என்று எச்சரித்தேன். அடுத்த கட்டமாக, இதுபோன்ற அனானிமிட்டி கமெண்ட்டுகளை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்று விழித்தபோது, 'டோன்ட் வொர்ரி டோண்டு' என்று உதவிக்கு வந்தனர் நண்பர்கள். அவர்களின் ஐடியாவைப் பின்பற்றி என் பிளாக்கர் ஐடி எண், என் ஃபோட்டோ ஆகியவற்றை என் பெயரோடு சேர்த்து எல்லா இடங்களிலும் எழுதத் தொடங்கினேன்.

இப்போது அடுத்த பிரச்னை ஆரம்பித்தது. என் வலைப்பதிவில் யார் வந்து பதில் போட்டாலும், அருவருக்கத்தக்க மொழி, ஆவேசமான கெட்ட வார்த்தைகளால். அவர்களை மிரட்டத் தொடங்கினான் போலி டோண்டு. பல நண்பர்கள் பயந்து போனார்கள்.

பலர் என்னோடு சகவாசம் வைத்துக் கொள்வதே ஆபத்துக்குரியது என்று நினைத்து ஒதுங்க, நான் தனிமையானேன்.

இந்நிலையில், அடுத்த குண்டு விழுந்தது. என் வலைப்பதிவு போன்றே, அச்சு அசலாக முகம் தெரியாதவனும் நிறைய வலைப்பதிவுகளை ஆரம்பித்தான். அதில் எவ்வளவு ஆபாசமாக கதைகளைப் போட முடியுமோ அவ்வளவையும் போட்டான்.

உடனே, பிளாக்கர் வலைத்தள நிர்வாகத்துக்கு இந்த விவரங்களை எல்லாம் தெரிவித்து, கடிதங்கள் எழுதி, பல வலைப்பதிவுகளைத் தடுத்து நிறுத்தினோம்.

அடுத்த பாய்ச்சல்தான் என்னை இன்னும் குலைநடுங்க வைத்தது. என் வீட்டுக்கு ஒரு வலையுலகத் தோழி வந்து சென்றிருந்தார். அப்போது என் வீட்டினரோடு அந்த அம்மையார் புகைப்படம் எடுத்துக்கொண்டு இருந்தார். இதை எப்படியோ தெரிந்துகொண்ட அந்த முகமற்றவன், என்னுடைய இமெயில் ஐடி போன்றே இன்னொரு ஐடியை உருவாக்கிக்கொண்டு, மிக அமைதியாக அந்த அம்மையாருக்குக் கடிதம் எழுதி, என் வீட்டில் எடுக்கப்பட்ட புகைப்படங்களைப் பெற்றுக்கொண்டான். அவ்வளவுதான், இப்போது, ஆபாசம் என் மகள் பெயரில் பொழிய ஆரம்பித்தது. அதுவும் ஃபோட்டோவோடு. நிச்சயம் நிலைகுலைந்து போனேன்.




**சைபர் கிரைம்**

**இப்போது, ஆபாசம் என் மகள் பெயரில் பொழிய ஆரம்பித்தது. அதுவும் ஃபோட்டோவோடு. நிலைகுலைந்து போனேன்.**



பிரிவில் போய் விவரங்களையும் எங்கள் ஆதங்கங்களையும் கொட்டினோம். பயங்கரத் தேர்ச்சியுடையவனாக இந்த முகமற்றவன் இருந்தான். உன்னைப் போல் ஒருவன் திரைப் படத்தில் வருவது போன்று, பல்வேறு நாடுகளின் ஐ.பி. முகவரிகளில் இருந்து, இவன் பதில்களைப் போட்டு வந்தான். அவனை எப்படியும் பிடித்து விடுவது என்ற வேகம் என் நண்பர்களிடையே தோன்றி, அவன் விட்டுச் சென்ற இணையத் தடங்களைக் கொண்டு, கடைசியாக அவன் மலேசியாவில் இருப்பவன் என்று கண்டுபிடித்தார்கள். எல்லாமே என் மூளைக்கு எட்டாத கம்ப்யூட்டர் சமாசாரம்.

**எச்சரிக்கை**

**பொது** பிரவுசிங் சென்டர்களில் போய், ஆன்லைன் ஷாப்பிங் செய்யாதீர்கள். அங்கே உங்கள் கிரெடிட் கார்டின் எண்களைக் கொடுக்க வேண்டி வரலாம். என்னதான் ஆன்லைனில் செக்கியூரிட்டி இருந்தாலும், நீங்கள் பயன்படுத்தும் கணினியில் என்ன தில்லுமுல்லு செய்துவைத்திருக்கிறார்கள் என்பது தெரியாது அல்லவா?



**செ**ன்னை மாநகர போலீஸ் மூலம், அவனை மலேசியாவில் இருந்து இந்தியா வரவழைத்து, போலீஸ் ஸ்டேஷனில் நிற்க வைத்தபோதுதான், முதன்முறையாக அவன் முகத்தை நேருக்கு நேராகப் பார்த்தேன். என் அனுபவத்தின் வயதுகூட அவனுக்கு இல்லை. மிஞ்சி மிஞ்சிப் போனால், 30, 35.

அவனுக்கும் எனக்கும் என்ன பகை? என்ன விரோதம்? ஒன்றுமே இல்லை. நான் என் கருத்துகளை எழுதிப் போகிறேன். அவன் அவனுடைய எண்ணங்களை. ஆனால், என் கருத்துகளும் சார்புகளும் பிடிக்கவில்லை என்பதற்காக, என்னை இத்தனை சித்ரவதை செய்யவேண்டுமா?

**இ**ணையமும், தொழில்நுட்பமும் அறிவின் சாளரங்களாக இருக்கின்றன. ஆனால், மனிதர்களின் உள்ளே இருக்கும் சாதி அழுக்கும் விரோதமும் வன்மமும் அவற்றுக்குள் புகாமல் ஃபில்டர் செய்ய வழியில்லையே! தொழில்நுட்பமும் வளர்ச்சியும் நம் மனத்தை இன்னும் தூய்மைப்படுத்தவில்லையே?''

# மத்தளம்.com

ஜோக்ஸ்: C.P. செந்தில்குமார்



''மழைக்காலம் முடியறவரை கம்ப்யூட்டர்ல விண்டோஸ் யூஸ் பண்ணக் கூடாது.''

''ஏன்?''

''விண்டோஸை ஓபன் பண்ணினா சாரல் அடிக்குமே?''

''அவரு சரியான அலட்டல் பேர்வழினு எப்படிச் சொல்றே?''

''வீட்டுக் கதவைக்கூட 'மல்ட்டி'விண்டோ அப்படினுதான் சொல்றாரு.''



''பாகவதருக்கு தொழில் பக்தி ஜாஸ்தி.''

''எப்படிச் சொல்றே?''

''அவரோட வெப் தளத்துக்கு மத்'தளம்'னு பெயர் வெச்சிருக்காரே!''



''உன்னோட இணையதள முகவரி கேட்டா உன் வருங்கால மனைவியோட அட்ரஸ் தர்றியே?''

''ஸாரி இணையும் தள முகவரி வேணும்னு கேட்டதா நினைச்சுட்டேன்.''

## ஞானக்கூத்தன்





சாலிவாகன சகாப்தம் ஒன்றில் வாழ்ந்திருந்த
வள்ளல் ஒருவர் படிகள் கட்டினார்
குன்றின் உச்சியில் இருக்கும் கோயிலுக்குப்
பக்தர்கள் வசதியாய்ப் போய்வந்தார்கள்
நூறு படிகள் ஏறிய பின்பு பக்தர்கள்
ஓய்வு கொள்ளவும் மண்டபம் கட்டினார்
பத்து பேர்கள் இருக்கலாம் மண்டபத்தில்
மழை பிடித்துக் கொண்டால் கஷ்டம்தான்.
குறைந்தபட்சம் நனையாமல் ஒதுங்கலாம்.

குன்றின்மேல் ஏறினேன். மண்டபத்தில்
அமர்ந்தேன். மாலை விளக்கேற்ற
எண்ணெய்த் தூக்குடன் படிகளில்
ஏறிக் கொண்டிருந்தார் கோயில் ஊழியர்.

சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒற்றை
வானரம் என்னைக் கடந்து சென்றது
குன்றின் பக்கவாட்டில் மற்றொரு குன்று
அழுந்திக் கிடந்ததுபோல் தோற்றம் தந்தது.
அவரிடம் கேட்டேன்: ஏனிந்தக் குன்று
அழுந்தினாற் போலத் தெரிகிறதென்று.
அவர் சொன்னார்: 'சீதையைத் தேட
இலங்கைக்குப் போகும்போது அனுமார்
ஆகாசத்தில் பறப்பதற்காகக்
காலை அழுத்தினார். அம்மலை
மண்ணுக்குள் நன்றாய்ப் புதைந்து போயிற்று.
அதைத்தான் நீங்கள் பார்த்தீர்கள்' என்று.

'இந்த மலையைப் பற்றி யாருக்கும்
தெரியாது போல இருக்கிறதே' என்றேன்.
'தெரியாதா... பாருங்கள் அங்கே' என்றவர்,
படியேறத் தொடங்கினார். அவர் சொன்ன
திசையில் ஆர்வமாய்த் திரும்பிப் பார்த்தேன்.
ஓர் ஆணும் பெண்ணும் களிப்பில்
இருந்தார்கள்
சிவ, சிவ.



# குப்பை

ஞாயிற்றுக் கிழமை காலையில் ராமானுஜமும், அவன் மனைவி பத்மாவும் மூச்சிறைக்க வாக்கிங் வந்து கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ராமானுஜம் நடப்பதை நிறுத்தி, ''பார் பார் அந்தக் கிழவியின் சேட்டையை'' என்று கை நீட்டிக் காண்பித்தான்.

அங்கே ரோட்டோரம் குவிக்கப்பட்டிருந்த தெருக் குப்பையை ஒரு கிழவி, கம்பியால் கிளறிக் கொண்டிருந்தாள்; அவளுக்குத் தேவையானது இருக்குமென நம்பி. மானாவாரியாக குப்பைகள் ரோடெல்லாம் சிதறிக் கொண்டிருந்தன.

கிழவியின் பக்கத்தில் போன ராமானுஜம், ''ஏய் கிழவி குப்பையைக் கிளறுவதை நிறுத்தமாட்டே'' என்று தொண்டை புடைக்கக் கத்தினான். கிழவி அவனை ஒரு கணம் பார்த்து பார்வையாலேயே 'போய்யா உன் வேலையைப் பார்த்துக்கிட்டு' என்று சொல்லாமல் சொல்லி வேலையைத் தொடர்ந்தாள்.

இனிமேல் பேசினால் மரியாதையில்லை என்று ராமானுஜம், ''வாடி... இவளுக திருந்தமாட்டாளுங்க'' என்று சமாளித்தபடியே பத்மாவோடு வாக்கிங்கைத் தொடர்ந்தான்.

பத்தாம் நம்பர் வீட்டைத் தாண்டி நடக்கும்போது பத்மாவிடம் ராமானுஜம் ஜாடையாக அந்த வீட்டைக் காண்பித்துச் சொன்னான்.

''விஷயம் கேள்விப்பட்டியா? பத்மநாபன் மச்சினி, டிரைவரோட ஓடிப் போனாளே... பத்து நாள் கழிச்சு வந்துட்டாளாம். விஷயத்தைக் கமுக்கமா மறைச்சுட்டான்.'' பத்மா சுவாரஸ்யமில்லாமல் அவனைப் பார்த்துவிட்டு நடப்பதே தன் குறி என்பது போல் ஒன்றும் சொல்லாமல் கூட நடந்தாள்.

15ம் நம்பர் வீட்டைத் தாண்டி நடந்தபோது ராமானுஜம், ''இந்த வீட்டுக் கதை இன்னும் விசேஷம். அமெரிக்காவில் வேலை பாக்கற சேஷன் பிள்ளைக்கு ஒரு பய இன்னும் பொண்ணு தரலை. எய்ட்ஸோ என்ன எழவோ?'' என்று சொல்லியபடி பத்மாவைப் பார்த்தான். இப்போதும் பத்மா அசுவாரஸ்யமாய்ப் பார்த்தாள். இது கொஞ்சம் ஏமாற்றம்தான் ராமானுஜத்துக்கு.

''வாய்ல கொழுக்கட்டையா. இவ்வளவு சொல்றேன் ஒண்ணும் சொல்ல மாட்டேங்கற'' என்று கேட்டான்.

''அந்தக் கிழவி ஒரு இடத்தில் நின்னு குப்பையைக் கிளறினதுக்கே அவ்வளவு சத்தம் போட்டீங்க. நீங்க வீடு வீடா குப்பையைக் கிளறிட்டு வர்றீங்களே! உங்களை நான் சத்தம் போடவா முடியும்?'' என்று பத்மா சொல்லவும் வீடு வரவும் சரியாயிருந்தது.

◆ ஜி.மணிவண்ணன் ◆

# நூல் அறிமுகம்

## எளிதான காரியம்தான்...

“இருபத்தைஞ்சு வருஷத்துக்கு முன்னால் எங்களை இங்கே கொண்டாந்து விட்டப்ப, இங்க பன்னிங்க எல்லாம் ஓடிட்டிருந்துச்சு. ராத்திரி நேரம். குடும்பத்துக்கு நூறு ரூபான்னு சாப்பாட்டுக்குக் கொடுத்தாங்க. அவ்வளோதான்!” - அன்னை சத்யா நகர் வாசி ஒருவரின் ஸ்டேட்மெண்ட் இது.

இப்போது சுத்தமான குடியிருப்புகள், தண்ணீர் வசதி, பொருளாதாரம், சுகாதாரம், கல்வி குறித்து விழிப்புணர்வு... இம்மாற்றங்களுக்குக் காரணம் விலிங்டன் கார்ப்பரேட் ஃபவுண்டேஷன். “கொஞ்சம் நேரத்தையும் அனுபவத்தையும் ஒதுக்கினா போதும்.... சமூக சேவை எளிதான காரியம் தான்...” என்கிறார் இம்முயற்சியில் பெரும் பங்காற்றிய **என்.பைரவன்**. அந்த முயற்சி எப்படி செயல்வடிவம் பெற்றது என **சாரு கேசி**யுடன் இணைந்து **‘இனி இது சேரி இல்லை’** நூலில் விளக்கியுள்ளார். வெளியீடு: **கிழக்கு பதிப்பகம், 33/15, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார் பேட்டை, சென்னை - 18. விலை ரூ.125/-**




‘உன் முகம் தேடும் பயணத்தில்/ஓர் அருவி பொங்கிப் பிரவகிக்கிறது/ புரண்டோடும் நீரில் அலைகிறதான்/ பனிபடர்ந்த மலையுச்சியில் துயிலும்/ இரு பறவைகளின் வாழ்வை/ எப்படி காண முடியும்?’ - ‘ஆழங்களில் அலைகிறவன்’ என்ற கவிதை இப்படி முடிகிறது. மிகத் திடீரென்று எதிர்ப்படுகிற படிமங்களும், உருவகங்களும் நிறைந்த இது போன்ற கவிதைகள் **‘தூறலின் கடைசித் துளி’** நூல் நெடுகக் கிடைக்கின்றன. ஆசிரியர்: **சந்திரா மனோகரன்,** வெளியீடு: **இருவாட்சி, 41, கல்யாணசுந்தரம் தெரு, பெரம்பூர், சென்னை - 11, விலை ரூ.60/-**




“இந்தப் பூமியில் நாம் கற்றுக்கொள்வதற்குத்தான் வந்திருக்கிறோம். இங்கே இதற்கு முன்பும் நாம் இருந்திருக்கிறோம்; எதிர்காலத்திலும் இருப்போம். நம்மைப் படைத்து அனுப்பிய சக்தியுடன் இணையும் வரை இது தொடரும் என்று ரூத் மாண்ட் கோமரியின் மூலம் ஆவிகள் தெரிவித்துள்ளனர்” - அட இருங்க ஸார் பயப்படாதீங்க... இது **விக்கிரவாண்டி வி.ரவிச்சந்திரன்** எழுதியுள்ள **‘அமானுஷ்ய பெண்மணி’** நூலில் இடம்பெற்றுள்ள ஒரு பகுதி... புனைவுக்கும், நிகழ்வுக்கும் இடைவெளி மிகக் குறைவுதான் என்பது இந்நூலை வாசிக்கையில் புரிகிறது. வெளியீடு: **மேகதூதன் பதிப்பகம், ப. எண்: 7, பு. எண்.13, சின்னப்ப ராவுத்தர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 05, விலை ரூ.45/-**

**- நேயமுகில்**

• பாலிவுட்டே எதிர்பார்த்திருக்கும் அதிவீர சாகசப் படம் வீர். ஜனவரி 22ஆம் தேதி அகிலமெங்கும் குலுங்க வெளியாகப் போகும் இப்படத்தில் சல்மான் கான் நெஞ்சு நிமிர்த்திய வீரன்.

• இந்த 'வீர்' படத்துக்காக சல்மான் புதி தாய் வலைப்பதிவைத் தொடங்கினார். வலைப்பதிவு, தம் தந்தை சலீம் கானின் பிறந்த நாளுக்கு சல்மான் கான் கொடுத்த பரிசு.

• இருபது ஆண்டுகளுக்கு முன்பு, சல்மான்கான் தாமே எழுதிய தந்தை - மகன் கதை, வீர். அதைத் திரையில் கொண்டு வந்திருப்பவர் அனில் சர்மா.

• சல்மான் கான் என்றாலே சர்ச்சை என் றொரு எழுதப்படாத விதி. அழகு அம்மணி கத்ரினா கைஃப், வீரனோடு கைகோக்க மாட்டேன் என்று சல்மானுக்கு டா சாக்லேட் தேவதை ஜரின் கானைத் தூக்கிக் கெ

• வீர், ஒரு பீரியட் படம். 1857க்கு பின் நட வீரன் கதைதான் வீர். கொதிக்கும் ராஜஸ்தா என்னாவது? சல்மான் கான் பன்னிரண்டு நாள் விர்ரடித்திருக்கிறார். போர்க் காட்சியாம். போரடி

• சமீபத்தில் எடுத்தவரை படத்தைப் பே

வேண்டும். வேகம்

கொண்டா கத்த

வெட்டித் த

இரண்ட

தாம்

பட

லாக

விட்



டா சொல்லிவிட, கத்ரினா போலவே இருக்கும் ண்டு வந்துவிட்டார் சர்ச்சைகான்.

தும் கதை. ஆங்கிலேயர்களோடு மோதும் இந்திய பாலைவனத்தில் குதிரை ஓட்டச் சொன்னால் ன்னிரண்டு மணிநேரம், வீர்க்காக பாலைவனத்தை ாதோ?

ட்டுப் பார்த்த சல்மான் அண்ட் கோ, காமெடி ண்டும் என்று முடிவு செய்திருக்கிறது. உடனே யை என்று அரைமணி நேரப் படத்தைத் தாமே ரிவிட்டார் சல்மான். இப்போது வீர், வழக்கமான ர மணி நேரத்துக்குள்ளேயே முடிந்துவிடுகிற

ஜரின் கானோடு இன்னொரு பிரிட்டிஷ் கிளியும் வீர் தில் ஜோடி போடுகிறது. மிஸ் யு.கே. லிசா ஸும் வீரில் வில்லாக வளையப் போகிறார்.

படத்தின் பட்ஜெட் 100 கோடியையும் தாண்டி து என்று பாலிவுட் கிசுகிசுக்கிறது.

• தந்தை சலீம் கானுக்கு படத்தின் காட்சிகளைப் போட்டுக் காட்டியிருக்கிறார் சல்மான். மனுஷன் ஒரு வார்த்தையும் சொல்லாமல் எழுந்து போய்விட்டாராம். ராத்திரி இரண்டு மணிக்கு சல்மானைக் கூப்பிட்டு வாயார, மனதார வாழ்த்தியிருக் கிறார் சலீம். படம் அவரை அவ்வளவு பாதித்துவிட்டதாம்.

• இதுவும் இன்னொரு வழக்கமான வீரனின் படம்தான். என்ன வித்தியாசமாக இருந்துவிடப் போகிறது என்று லேசாக நொட்டு சொல்ல ஆரம்பித்துவிட்டார்கள். ஒவ்வொரு இன்ச்சிலும் வித்தியாசம் மிளிரப் போகிறது என்று சல்மான் அலறிப்பிடித்துக்கொண்டு சால்ஜாப்பு சொல்லிக்கொண்டு இருக்கிறார். ரசிகர்கள் நம்பினால், சரிதான்!



# நட்சத்திர சிறுகதை 8

இன்டர்நெட் இன்று உலகத்தை ஆள்வதாகச் சொல்கிறோம். உண்மையில், அந்த இன்டர்நெட்டின் ஓர் அங்கமான ட்விட்டர் என்கிற சாதனம்தான் கோடிக்கணக்கான மக்களைப் பைத்தியம் பிடித்தாற்போல் இழுத்துவைத்திருக்கிறது, போதை மருந்தைவிட அதீதமாக வசீகரித்து உள்ளே இழுக்கிறது, மாணவர்கள் தொடங்கி சீனியர் சிட்டிசன்கள் வரை ஏராளமானோர் இதிலிருந்து மீள முடியாமல், மீள விரும்பாமல் இருக்கிறார்கள்.

நிஜத்தில், டிவிட்டர் என்பது ஒரு பெரிய தொழில்நுட்பச் சவால். எந்த ஒரு விஷயத்தையும் 140 எழுத்துகளில் சுருக்கமாகச் சொல்லவேண்டும். அதற்குமேல் ஒரு கமா, முற்றுப்புள்ளி, ஆச்சர்யக்குறிகூட அங்கே அனுமதிக்கப்படாது. இந்தச் சவால், மனித குலத்துக்கு வேண்டியிருக்கிறது போல. அதனால்தான் ட்விட்டருக்கு உலகமே அடிமையாகிக் கிடக்கிறது.

- அன்பே,
- ஒரு கிராமத்துப் பெண்ணுக்கு, ட்விட்டர் மாதிரியானதொரு நவீன தொழில்நுட்பத்தைப் பயன்படுத்திக் காதல் கடிதம் எழுதுகிற முதல் ஆள் நானாகத்தான் இருப்பேன்.
- உண்மையில், இது காதல் கடிதம்கூட அல்ல. என் மனத்தில் அடைந்து கிடக்கிற சில விஷயங்களை உன்னிடம் பகிர்ந்தாகவேண்டும், கிட்டத்தட்ட பாவ மன்னிப்புபோல.
- நம் இருவரையும் தூரம், நேரம் மாதிரியான சமாசாரங்களால் பிரிக்கவே



என்.சொக்கன்

முடியாது. அப்படியோர் ஆனந்தமான நேசத்தில் நாம் திளைத்துக் கிடக்கிறோம்.

- என் கண்ணோடும் நெஞ்சோடும் எந்நேரமும் உன் முகம்தான் திரையிடப்பட்டிருக்கிறது. உன் சிரிப்பு, சிணுங்கல், சீண்டல், கோபம் எதையும் மறக்க முடியவில்லை.

- உன்னை முதன்முறையாகப் பார்த்தபோது எனக்கு ஆசையோ, காதலோ, ஈர்ப்போ வரவில்லை. மற்ற பெண்களைப்போலத்தான் உன்னையும் சாதாரணமாக நினைக்கத் தோன்றியது.

- அதன்பிறகு, நாம் அடிக்கடி சந்தித்தோம். ஏதோ ஒரு புள்ளியில் நீ என்னை வசீகரித்துப் பைத்தியமாக்கிவிட்டாய். அப்போது விழுந்தவன்தான், எழ முடியவில்லை.

- என் மனத்தில் இருப்பதையெல்லாம் உன்னிடம் கொட்டிவிட வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் எப்படி? எங்கே?

- எனக்கு டைரி எழுதும் பழக்கம் இல்லை. இந்த விஷயத்தை வெளியில் நாலு பேரிடம் பகிர்ந்துகொள்கிற துணிச்சலும் இல்லை.

- ஆகவே, உனக்கும் எனக்குமான ஓர் அந்தரங்கப் பிரதேசமாக இந்த ட்விட்டரைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். இங்கே என் மனத்தைத் திறந்து வைக்கப்



# இனிய பறவை 140

போகிறேன்.

● கவலைப்படாதே, உன்னையும் என்னையும் தவிர யாரும் இந்தப் பதிவுகளைப் பார்க்கமுடியாது, ட்விட்டரில் அதற்கான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்துவிட்டேன்.

● இப்போது உன் கிராமத்தில் இன்டர்நெட் இல்லை. என்றைக்காவது வரும், அப்போது நான் உனக்கு இந்தப் பக்கங்களைக் காட்டுவேன், என் மனம் உனக்குப் புரியும்.

● ட்விட்டரின் அதிசயம், இதில் ஒவ்வொரு வரிக்கும் 140 எழுத்துகளுக்கு மேல் எழுதமுடியாது. நம் காதலை இந்தச் சின்னச் சிமிழ்களில் சேகரித்துவைக்கிறேன்.

● சின்ன வயதிலிருந்து, பல காதல்கள் என்னை நோக்கி வந்திருக்கின்றன. நானும் சிலதைத் துரத்திச் சென்றிருக்கிறேன். ஆனால் அனைத்திலும் தோல்விதான் மிச்சம்.

● பள்ளி நாட்களில், ஒரு பெண் என்னைத் தீவிரமாகக் காதலித்தாள். எனக்கும் அவளை ரொம்பப் பிடித்திருந்தது.

● ஆனால், மிடில் க்ளாஸ் குடும்பச் சூழல், 'படிப்புதான் முக்கியம்' என்கிற அறிவுரைகள், அப்பாவிடம் பயம் எல்லாம் சேர்ந்து, அந்தக் காதலை வளரவிடவில்லை.

● கடைசியில், என்னை நேசித்த அந்தப் பெண்ணுக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன், அதன் முதல் வரி, 'அன்புச் சகோதரிக்கு'

● மனமாரக் காதலித்த ஒருத்தியைச் சகோதரி என்று அழைப்பது எப்பேர்ப்பட்ட பொறுக்கித்தனம்! அப்போது எனக்கு அது புரியவில்லை.

● சொல்லப்போனால், அவளைச் 'சகோதரி' என்று அழைத்ததன்மூலம் என்னை நானே நல்லவனாக எண்ணிக்கொண்டேன். இப்போது அந்த அபத்தத்தை நினைத்தால் சிரிப்பு வருகிறது.

● அதன்பிறகு, கல்லூரியில் இன்னொருத்தி என்னைச் சுற்றிவந்தாள். அந்த அல்ட்ரா மாடர்ன் பெண் தன் காதலை வெளிப்படையாகச் சொல்லத் தயங்கவில்லை.

● எனக்கும் அவளைப் பிடித்திருந்தது. வீடு, படிப்பு, அப்பா என்று எந்தப் பயமும் இல்லை. பேசாமல், காதலிக்க ஆரம்பித்துவிடலாமா என்று யோசித்தேன்.

● அப்போது நான் ஒரு முழுப் பொறுக்கியாக அறியப்பட்டிருந்த நேரம். இவன் உருப்படமாட்டான் என்று என் வீட்டில் எல்லோரும் முடிவுகட்டியிருந்தார்கள்.

---

''தலைவர் ஆத்துல வலை வீசி மீன் பிடிச்சிட்டு இருக்கார்.''

''ஓஹோ... அதான் அவர் செல்லுக்கு ட்ரை பண்ணுனா 'நெட் வொர்க் பிஸி'னு வருதா?''

– எஸ்.அபிராமி



● ஆகவே, நான் ஒருத்தியைக் காதலிக்கிறேன் என்று தெரிந்தால், அவர்கள் கோபப்படமாட்டார்கள். 'இனிமேலாவது திருந்தட்டும்' என்றுதான் நினைப்பார்கள்.

● ஆனால், ஒரு பெண் வலிய வந்து காதலிக்கிறபோது அதை நிராகரிப்பதில் ஓர் அல்ப சுகம் இருக்கிறதில்லையா, அதற்காக அந்தக் காதலையும் நான் நிராகரித்தேன்.

● பல நாள் கழித்து, நான் வேலைக்குச் சேர்ந்த நேரம். எங்கள் அலுவலகத்தில் துறுதுறுவென்று ஒருத்தி. அவளை நான் நேசிக்க ஆரம்பித்தேன்.

● இப்போது, எந்தத் தடைகளும் இல்லை. நேராக அவளிடம் என் காதலைச் சொல்லிவிடலாம் என்று போனேன். அதற்குள், அவள் தனது திருமண அழைப்பிதழை நீட்டிவிட்டாள்.

● அதன்பிறகு, என் வாழ்க்கையில் பகைமை இல்லை, காதல் இல்லை, எதுவும் இல்லை, வறட்டியைப்போல என்னுடைய உலகம் வெடித்துக் கிடந்தது.

● சின்ன வயதில் இரண்டு காதல்களை அநியாயமாக நிராகரித்தேனே, அதனால் 'இனிமேல் உனக்கு அந்த அனுபவமே கிடையாது போடா' என்று ஆண்டவன் தீர்மானித்துவிட்டானோ?



## எச்சரிக்கை

உங்களுக்குத் தெரியாதவரிடம் இருந்து வரும் இமெயிலைத் திறக்க வேண்டாம். அப்படியே திறந்தாலும் அதனோடு ஏதேனும் இணைப்புகள் வந்திருந்தால், அதைத் திறக்க வேண்டாம். உங்கள் கணினியில் வைரஸையோ மால்வேர்ரையோ ஸ்பைவேர்ரையோ அவை ஒளித்து வைத்துவிடலாம். அப்புறம், உங்களைப் பற்றிய அத்தனை தகவல்களும் வெளியே போய்விடும்.

● நினைக்க நினைக்க, என்னுடைய சுய இரக்கம் அதிகரித்தது. வாய் விட்டுக் கதறத் தோன்றியது 'என்னை விரும்ப இந்த உலகத்தில் யாருமே இல்லையா?'

● ம்ஹூம், அப்படி யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

● என்னுடைய மோசமான கடந்தகால நடவடிக்கைகளால், வீடு தொடங்கி அலுவலகம் வரை எல்லோரும் என்னைச் சகித்துக்கொண்டார்களே தவிர, யாரும் விரும்பவில்லை.

● யாராலும் விரும்பப்படாத வாழ்க்கை எப்படி இருக்கும் என்பதைப்பற்றி உன்னால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது.

● எழுதப்படாத ஒரு தாளைப்போல, எந்தக் கை வந்து புள்ளி வைத்துக் கோலம் போடும் என்று காத்திருக்கிற தரையைப்போல நான் ஏங்கிக்கொண்டிருந்தேன்.

● இதை நான் பளிச்சென்று சொன்னால்கூட, யாரும் கேட்கமாட்டார்கள்; நம்பமாட்டார்கள். 'போடா பொறுக்கி' என்று சொல்லிவிட்டுப் போய்விடுவார்கள்.

● அதுமட்டுமில்லை, நான் என் வாழ்க்கையில் ஓர் ஈரத்துக்காகக் காத்திருக்கிறேன் என்பதைப்பற்றி வெளியே பேசுவது அசிங்கமில்லையா?

● நான் காதலில் தோற்றவன்

இல்லை. ஆனால், காதலிக்கத் துப்பில்லாதவன். அதை இப்போது நன்றாகப் புரிந்துகொண்டுவிட்டேன்.

● என்னால் எல்லாப் பெண்களையும் சகோதரியாக, தாயாக, ஆதிபராசக்தியாகவெல்லாம் நினைக்கமுடியாது. அதற்காக, எல்லோரையும் காதல் பார்வை பார்ப்பதும் இல்லை.

● ஏதோ சில ரசாயனங்கள் என் நடவடிக்கைகளில் குளறுபடி செய்துவிட்டன. அதனால், நான் எல்லோருக்கும் மோசமானவனாக அறிமுகமாகியிருக்கிறேன்.

● நான் நல்லவன்தான் என்று பொய் சொல்ல எனக்கு விருப்பமில்லை. நான் கெட்டவன்தான். அது தெரிந்தும் நீ என்னை விரும்புவது எனக்கு ரொம்ப சந்தோஷம்.

● உன் காதலை நான் வெறும் மகிழ்ச்சியாக மட்டுமில்லை, எனக்கு நீ தந்திருக்கும் மிகப் பெரிய கௌரவமாகவே நினைத்துக்கொள்கிறேன்.

● ஆனால், உனக்கு நான் யோக்கியமானவனாக இருப்பேனா? என்னால் நிச்சயமாகச் சொல்லமுடியவில்லை.

● உனக்கு மட்டுமில்லை, மற்றவர்கள் யாருக்கும், ஏன் என்னளவில் எனக்கு நானேகூட யோக்கியமாக இருப்பேனா என்பது சந்தேகம்தான்!

● ஆனால், என் வாழ்க்கையிலும் முதன்முதலாக ஒரு வெற்றிகரமான காதல் அமைந்திருக்கிறது என்கிற திருப்தி எனக்கு. இதைக் கொடுத்த உனக்கு என்னுடைய நன்றிகள்.

● நான் இதை உன்னிடம் நேரில் சொல்லமுடியாமல் போகலாம். அதற்காகத்தான் இந்த ட்விட்டர் பதிவுகள்.

● என்றைக்காவது உன் கிராமத்துக்கு இன்டர்நெட் வரும், உனக்கும் ட்விட்டர் அறிமுகமாகும். அப்போது நீ இந்தக் குறிப்புகளைப் படிக்கலாம்.

● இறுதியாக ஒரு விஷயம், இந்தக் குறிப்புகளை வாசிக்கும்போது, மறக்காமல் கடைசியிலிருந்து தலைகீழாகப் படித்துப்பார்.




**பின்குறிப்பு:**

அவன் தன்னுடைய ட்விட்டர் பதிவுகளை மீண்டும் ஒருமுறை படித்து ரசித்துக்கொண்டான். கம்ப்யூட்டரை அணைத்துவிட்டு ஜன்னலருகே வந்து நின்றான்.

வெளியே சாலையில் விதவிதமான பெண்கள் பள்ளிக்கு, கல்லூரிக்கு, அலுவலகத்துக்கு, கோயிலுக்கு, கடைத்தெருவுக்கு, இன்னும் எங்கெங்கோ விரைந்துகொண்டிருந்தார்கள். அவர்களை நிதானமாகப் பார்த்தான், அவனிடமிருந்து ஒரு நீண்ட ஏக்கப் பெருமூச்சு வெளிப்பட்டது. 'அந்தப் பெண் இவர்களில் யாராவது ஒருத்தியாக இருக்கக்கூடாதா!' ○













# நெட்ல மாட்டின சுட்டிங்க!




இணையச் சிறப்பிதழுக்காக நாம் விரித்து வைத்த 'நெட்'டில் எக்குத் தப்பாய் மாட்டிக் கொண்டனர் இந்தச் சுட்டிகள். 'அவரா இவர்?' என அசந்து போகும் அளவுக்கு இப்போ பிரபலமா இருக்கறவங்கதான் இவங்க. அடையாளம் தெரியுதா? ட்ரை பண்ணிப் பாருங்க...

(விடைகள் இந்த இதழிலேயேதான் இருக்கு!)

'**வா**யைக் கட்டி வயிற்றைக் கட்டி' தனக்கென ஒரு வீடு கட்டிக் கொள்வார்கள். தெரிந்திருக்கும். ஆனால், காய்கறி விற்றுக் காக சேர்த்து இலவச சிகிச்சை அளிப் பதற்காகவே ஒரு மருத்துவமனையைக் கட்டியுள்ள பெண்மணியைத் தெரியுமா?

தெரிந்து கொள்ளுங்கள். சுபாஷினி மிஸ்த்ரி என்ற 72 வயதுப் பெண்மணிதான் அவர். கொல்கத்தாவில் தெற்குப் புறநகர் பகுதியில் உள்ள ஹன்ஸ்புகூர் என்கிற சிற்றூரில் மருத்துவமனையைக் கட்டியுள் ளார்.

'எனது இந்தக் கிராமத்தில் இனி யாருமே போதிய மருத்துவ சிகிச்சை இல் லாததால் இறந்துவிடக் கூடாது' - இப்படி ஒரு முடிவெடுத்தார் சுபாஷினி. முடி வெடுப்பது சுலபம். ஆனால், செயல் படுத்துவது...?

''அப்போது எனக்கு மூன்று மகன்கள். மூத்தவனின் வயதே ஏழுதான்'' என்று கூறும் சுபாஷினி, அக்கம்பக்கத்தில் உள்ள வர்களின் தோட்டங்களிலிருந்து காய்கறி களை விலைக்கு வாங்கி, கொஞ்சம் லாபம் சேர்த்து உள்ளூர் மார்கெட்டில் விற்கத் தொடங்கினார். கூடவே எல் லாரிடமும் தம் கனவைப் பகிர்ந்துகொண்டார். எல்லோ ருமே தவறாமல் சிரித்தார்கள். ''கொம்புத் தேனுக்கு முடவன் ஆசைப்படலாமா?''

ஆனால், சுபாஷினி தீர்மான மாக இருந்தார். அவரது அடுத்த எண்ணம், தமது மகன்களில் ஒருவனாவது டாக்டர் ஆக வேண்டும் என்பது.

* காய்கறிக் கடையில் சுபாஷினி



# காய்கறியிலிருந்து

ஒரே பாட்டில் ஏழை கோடீஸ்வரர் ஆவது சினிமாவில் எளிதாகச் சாத்தியம். ஆனால் சுபாஷினியின் லட்சியமும் அதை அடைய அவர் எடுத்துக் கொண்ட முயற்சி யும்தான் சாதனைச் சரித்திரம்.

*1971* - சுபாஷினியால் மறக்க முடியாத வருடம். நோய்வாய்ப்பட்ட கணவருக்கு உரிய சிகிச்சை செய்யக் கைவசம் போதிய பணம் இல்லாததால் அவர் விதவையான வருடம்.

அநாதைகள் / ஏழைகள் விடுதியில் தங்கிப் படித்துக் கொண்டிருந்த தமது மூன்றாவது மகன் அஜோய் இதற்கு ஏற்றவன் என்று எண்ணினார் சுபாஷினி. அவன் தொடர்ந்து நல்ல மதிப்பெண்கள் எடுத்து வந்தான்.

ஆனால் அஜோய்க்கு மருத்துவத்தின் மீது நாட்டமில்லை. பட்டப்படிப்பில்

காம்ப்ளான் கதை

வேதியியல் பிரிவில் சேர்ந்தான். சுபாஷினி மனமுடைந்து போனார். என்றாலும் சீக்கிரமே தம்மைச் சமாதானப்படுத்திக்கொண்டார். தமது குடும்பத்தில் ஒரு மருத்துவர் உதிக்காவிட்டால் என்ன? தாம் மருத்துவமனை கட்டக் கூடாதா?

இத்தனை வருடங்களில் சிறுகச்சிறுகச் சேர்த்ததில் கொஞ்சம் நிலத்தை வாங்கிப் போட்டார். இதற்குள் அந்த ஊர்க்காரர்களுக்கு சுபாஷினியின் தீவிரம் புரியத் தொடங்க, நன்கொடை அளிக்கத் தொடங்கினார்கள். அடுத்த மூன்று வருடங்களில் கட்டிடம் எழும்பத் தொடங்கியது. 1996ல் அது திறக்கப்பட்டபோது கீழ்த்தளம் மட்டுமே கொண்ட மருத்துவமனையாக - வெறும் 3000 சதுர அடி பரப்பில் - உருவாகியிருந்தது. இதற்குள் மனம் மாறி அம்மாவுக்கு உதவ முடிவெடுத்த அஜோய்,



✣ ✣

**தன் குடும்பத்தில் ஒரு மருத்துவர் உதிக்காவிட்டால் என்ன? தான் மருத்துவமனை கட்டக்கூடாதா?**

✣ ✣

கல்கத்தா மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து மருத்துவக் கல்வியை முடித்திருந்தார்.

இன்று பத்தாயிரம் பேருக்கும் அதிகமான அளவில் மேற்கு வங்காள மாநிலத்தைச் சேர்ந்த பலரும் அந்த மருத்துவமனையில் சிகிச்சை எடுத்துக் கொள்கின்றனர். பங்களாதேஷில் இருந்துகூட வருகிறார்கள்! யாருக்குமே சிகிச்சை மறுக்கப்படுவதில்லை. யாரிடமிருந்தும் கட்டணம் கேட்கப்படுவதில்லை. தினமும் 16 மணி நேரமாவது தாயும் மகனும் மருத்துவமனையிலேயே தங்கி, எல்லாம் சரியாக இருக்கிறதா என்பதை உறுதி செய்து கொள்கிறார்கள். விஷயத்தைக் கேள்விப்பட்டு ஸ்பான்ஸர்கள் முன்வந்திருக்கிறார்கள். மேலும் நிதி தேவைப்படுகிறது.

மன ஆழத்தில் மனிதாபிமானமும், உறுதியும் இருந்தால் எதுதான் சாத்தியமில்லை? ஹன்ஸ்புகூர் மருத்துவமனை மேலும் பலருக்கு இந்த நம்பிக்கையை அளித்திருக்கும். நம் சமூகத்துக்கு இதைவிடப் பெரிய சிகிச்சை ஏது?

# ஹாஸ்பிடல்!



தமிழாக்கம் :
**ஜி.எஸ்.எஸ்.**

செய்தி : **டைம்ஸ் ஆஃப் இந்தியா**

வாசகர் யோசனை :
**தி.வி.கிருஷ்ணமூர்த்தி**

# குரு பெயர்ச்சி பலன்கள்

**மேஷம்:**

உங்கள் ராசிக்கு கும்ப ராசி 11ம் இடமாக விளங்குவதால், அதிர்ஷ்டம் உங்களைத் தேடி வரப் போகிறது. குரு பார்வை 3ம் இடத்துக்கு வருவதால் உடன்பிறப்பு வழியில் சகாயம் ஏற்படும். குரு 5ம் இடத்தைப் பார்ப்பதால் குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சி, பூர்விக வழியில் சொத்து; சுய சொத்து வாங்கும் யோகம் கிட்டும். 7ம் இடத்தைப் பார்ப்பதால் மனைவி வழியில் நற்பலன் உண்டாகும். சிலருக்கு மகப் பேறு பாக்கியம் கிட்டும். தொழில் துறையில் அபிவிருத்தி ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். பணப் பற்றாக்குறை நீங்கும். மூத்த சகோதரி, சகோதரர்களால் நற்பலன் உண்டாகும். கல்வி வளம் மேன்மை அடையும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவீர்கள். உத்தியோகத்தில் உள்ளவர்களுக்கு நல்ல வாய்ப்புகள் தேடி வரும். வேலை கிடைக்காதவர்களுக்கு வேலை கிட்டும். அரசியல்வாதிகளுக்கு நல்ல வாய்ப்பு தேடி வரும். கும்ப குரு நல்ல ஏற்றத்தை அளிக்குமே தவிர கெடுபலனைத் தராது. ஆதலால் பரிகாரம் செய்யத் தேவை இல்லை.



**ரிஷபம்:**

ரிஷப ராசிக்கு 10ம் இடம் என்று சொல்லக்கூடிய ஜீவன கர்ம ஸ்தானத்துக்கு குரு பெயர்ச்சி ஆகிவிடுகிறார். 10ம் இடம் என்று சொன்னவுடன் பயப்படத் தேவை இல்லை. பத்தில் குரு வந்தால் பதவிக்குக் கேடு விளைவிக்கும் என்று சொல்வார்கள். ஆனால் இது நடைமுறையில் ஒத்து வரவில்லை. பத்தில் குரு வந்தால் பதவி தேடி வரும். பண வருவாய் மிகுதியாகும். தடைகள் விலகி, திருமணம் கைகூடும். கல்வி வளம் மேலோங்கும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். கணவன் மனைவிக்குள் இருந்த வந்த கருத்து வேற்றுமை மறையும். சுமூகமான போக்கு ஏற்படும். கடன் பிரச்னை தீரும். நோய் நொடிகள் குணமாகும். குருவின் அருட்பார்வைகள் நன் றாக இருப்பதால் மலை போல் வரும் கஷ்டம் பனி போல் விலகும். பணத் தொல்லை விலகும். சிலருக்கு வீடு/வாகன சுகம் கிட்டும். வியாழன்தோறும் குரு காயத்ரி படித்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**மிதுனம்:**

மிதுன ராசிக்கு அஷ்டமஸ்தானம் என்று சொல்லக்கூடிய 8ம் இடத்திலிருந்து 9ஆம் இடத்துக்குச் செல்கிறார் குரு. 9ம் இடம் என்பது பாக்கியம், பராக்கிரம ஸ்தானம். ஆதலால் தீராத கடன், வழக்குப்

## தஞ்சை பரத்வாஜ்

பிரச்னையிலிருந்து விடுதலை கிட்டும். பண வருவாய் மிகும். சுபகாரியப் பேச்சு வார்த்தை பலன் அளிக்கும். நீண்ட தூரப் பயணம் செய்ய வேண்டி இருக்கும். சிலருக்கு வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். சந்தோஷம் பெருகும். மனத்தில் தைரியமும், தன்னம்பிக்கையும் மிகுந்து காணப்படும். ஆதாயம் கிட்டும். குழந்தைகளால் மன மகிழ்ச்சி ஏற்படும். நண்பர், உறவினர் வழியில் அனுகூலம் ஏற்படும். பூர்விக வழியில் ஆதாயம் கிட்டும். மனக்கிலேசம் விலகும். புண்ணிய ஸ்தலம் சென்று குலதெய்வப் பிரார்த்தனையைச் செய்து முடிப்பீர்கள். மகான்களின் தரிசனம் கிட்டும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம், தொழில் மாற்றம் ஏற்படும். புதிய தொழில் தொடங்க ஏற்ற தருணம். பலநாள் எதிர்பார்த்து இருந்த நல்ல தகவல் வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ஆஞ்சநேயர் வழிபாடு ஆரோக்கியமான சூழ்நிலையை உருவாக்கும்.

**கடகம்:**

கடக ராசிக்காரர்களான உங்களுக்கு குரு பகவான் 8ம் இடம் என்று சொல்லக்கூடிய அஷ்டம ஸ்தானத்துக்குப் பெயர்ச்சி ஆகிறார். 'நல்லவன் எட்டில் இருந்திடில் கிட்டிடும் ராஜ யோகம்' என்பார். நல்லவரான குரு எட்டில் இருந்தால் எதிர்பாராத விதமான நற்பலனை அள்ளிக் கொடுப்பார்




**19.12.2009 முதல்**

**18.12.2010 வரை**

என்பது தான் இதன் பொருள். ஆகையால் கவலைப்படத் தேவை இல்லை. வம்பு வழக்கு சாதகமாகும். வரவேண்டிய பணம் வந்து சேரும். மன அமைதி ஏற்படும். கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மனைவி வழியில் ஆதாயம் கிட்டும். பின்தங்கிய மாணவர்களுக்கு நல்ல முன் னேற்றம் ஏற்படும். வாக்கு வன்மை, நாணயம் காப்பாற்றப்படும். புதிய வீடு/மனை வாங்க நேரிடும். கடன் பிரச்னை தீரும். வியாழக் கிழமைதோறும் ராகவேந்திர சுவாமியை தரிசனம் செய்து வந்தால் சங்கடங்கள் தீரும். நல்லது நடக்கும்.

**சிம்மம்:**

**சி**ம்ம ராசிக்காரர்களே! உங்களுக்கு ஏழாம் இடமான கும்ப ராசிக்கு குரு பெயர்ச்சி ஆகிறார். ஏழாம் இடத்திலிருந்து ஜென்ம ராசியை குரு பார்ப்பதால் இழந்த செல்வாக்கைத் திரும்பப் பெறும் காலம் வந்தாச்சு. உடல் உபாதைகள் தீரும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். வம்பு வழக்கு வியாபாரத்தில் விடுதலை கிட்டும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். உத்தியோக உயர்வு ஏற்படும். போட்டிகள் குறையும். வெற்றி கிட்டும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். தடைகள் விலகி, திருமணம் கைகூடும். பணவரவு பெருகும். கல்வி வளம் மேலோங்கும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் கிட்டும். சிலருக்கு சொந்த வீடு வாங்கும் யோகம் கிட்டும். வெளிநாடு செல்லும் வாய்ப்பு உண்டாகும். மனத்தில் தைரியம் மிகுந்து காணப்படும். பொதுநலவாதிகள், பொது வாழ்க்கையில் ஈடுபடுவதால் நல்ல பெயர் கூடும்.

"ஏலக்கடைல இருந்த பிரிண்ட்டரை செகண்ட்ஹேண்டா வாங்கினது தப்பா போச்சு."

"ஏன்?"

"எதை பிரிண்ட் குடுத்தாலும் மூன்று முறை வந்துடுது."

- கற்பகம்



**கன்னி:**

**க**ன்னி ராசிக்காரர்களே! உங்களுக்கு குரு பகவான் சத்ரு ரோகம், கடன் ஸ்தானத்தில் பெயர்ச்சி ஆகிறார். இந்த குரு பெயர்ச்சியில் கவனத்துடன் இருக்க வேண்டும். இதன்கூட ஏழரை சனியும் நடைபெறுவதால் எதிலும் கவனமாகச் செயல்பட வேண்டும். தேவை இல்லாத வழக்குகளில் சம்பந்தப்படுத்தப்படுவீர்கள். யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. ஆரோக்கியத்தில் கண்ணும் கருத்துமாய் இருப்பது நல்லது. மாணவர்கள் கல்வியில் அக்கறை எடுத்துப் படித்து வருதல் வேண்டும். திருமண முயற்சியையும் புதிய முயற்சிகளையும் சற்றுத் தள்ளிப் போடுவது நல்லது. தேவையில்லாத செலவுகள் தேடி வரும். உத்தியோகத்தில் வேலைப் பளு கூடும். கணவன் மனைவி இடையே கருத்து வேற்றுமை உண்டாகும். பேச்சில் நிதானம் தேவை. அரசியல்வாதிகளுக்கு, தேவை இல்லாத பழி வந்து சேரும். கூட்டு வியாபாரக் கணக்கு வழக்குகளைச் சரிபார்த்துக் கொள்வது நல்லது. பிரதி வியாழன் குரு, சனி இருவருக்கும் தீபம் ஏற்றி பிரதட்சணம் செய்து வருதல் நலம்.

(மற்ற ராசிகள் அடுத்த வாரம்...)

## தமிழ் விக்கிபீடியா

கட்டற்ற கலைக்களஞ்சியம். நீங்களும் தொகுக்கலாம். தமிழ்க் கட்டுரைகள்: 20,117 என்ற முன்னுரையுடன் வரவேற்கிறது இந்த இலவச தமிழ் இணைய தளம்.

லாபத்தை எதிர்நோக்காத விக்கிமீடியா அறக்கட்டளை திட்ட ஆதரவுடன் ஆரம்பிக்கப்பட்டது, இந்தத் தமிழ் விக்கிபீடியா. 'விக்கி' என்றால் சிக்கிரம் என்று பொருள். விக்கிபீடியாவின் 13 மில்லியன் கட்டுரைகள் (2.9 மில்லியன் கட்டுரைகள் ஆங்கில மொழியில்) உலகில் உள்ள தன்னார்வலர்களால் கூட்டாக எழுதப்பட்டவை. ஜிம்மி வால்ஸ் மற்றும் லார்ரி சாங்கர்ரால் துவக்கப்பட்ட இந்த இணையதளம், பல துறைகளைப் பற்றிய குறிப்புகள் எடுக்க மிகவும் உதவிகரமாகச் செயல்பட்டு வருகிறது.

தமிழ், பண்பாடு, இலக்கியம், அறிவியல், தொழில்நுட்பம், சமூகம், கணிதம் என எதைப் பற்றி வேண்டுமென்றாலும் ஆழ்ந்த கருத்துக்களை நாம் அறிந்து கொள்ள ஏகப்பட்ட கட்டுரைகள் அழகான, ஆங்கிலம் கலக்காத தமிழில் தமிழ் விக்கிபீடியாவில் தொகுக்கப்பட்டுள்ளன.

முதற் பக்கத்தில் உள்ள விக்கி செய்திகள் நம்மை விக்கித்துப் போகச் செய்கின்றன. உலகின் மூலை முடுக்குகளில் நடக்கும் பலவிதமான செய்திகளின் அழகான தமிழ்த் தொகுப்பு இங்கே நம்மை வரிசை கட்டி வரவேற்கிறது. உலகின் எந்த நாட்டின் செய்தி வேண்டும், எப்படிப்பட்ட செய்தி வேண்டும் என தனித் தனியான பிரிவுகள் இங்கே தரப்பட்டுள்ளன. நீங்களும் இப்பகுதியில் செய்தி தொகுக்க வேண்டுமா? தாராளமாகச் செய்யுங்கள். ஆனால், இதுவரை அது விக்கி செய்திப் பகுதியில் தொகுக்கப்படாததாக இருக்க வேண்டும்.

விக்கிபீடியாவை எப்படி பயன்படுத்துவது, எப்படி கட்டுரைகள் எழுதுவது, விக்கிபீடியா சமூகத்தில் எப்படி பங்கு கொள்வது போன்ற வினாக்களுக்கான விடையை, விக்கிபீடியா உதவி என்ற பக்கத்தில் அறிந்து கொள்ளலாம்.

தமிழில் நீங்கள் படிக்கவும், உங்களுக்குத் தெரிந்ததை மக்களுக்கு நீங்கள் தெரியப்படுத்தவும், தமிழ் விக்கிபீடியாவுக்குள் சென்று இன்றே, இப்பொழுதே எழுத, தொகுக்க ஆரம்பிக்கலாம். எழுதும் யாருக்கும் சன்மானம் இல்லை. சேவையின் அடிப்படையில் சரியான தகவல் ஆதாரங்களைத் தந்து நீங்கள் எழுதும் கட்டுரையில் தவறுகள் இருந்தால், அதனைப் பிற பயனர்கள் திருத்துவார்கள்; தாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்று!

– **நளினி சம்பத்குமார்**



## இவங்க இப்படித்தாங்க... 10

திரையுலகில் எம்.ஜி.ஆர், சிவாஜி என்ற இரு உச்ச நட்சத்திரங்களின் போட்டிக்கு நடுவே ஜெமினிகணேசன் தனக்கென ஒரு பாணியுடன் அவர்களுக்கு ஈடுகொடுத்து காதல் மன்னனாக நின்றார். அதேபோல இசைத் துறையில் இளைய ராஜா, ஏ.ஆர்.ரஹ்மான் என்கிற இரு இசைப் புயல்களுக்கு மத்தியில் தென்றலாக தனித்து நின்று சமாளித்தவர் இசையமைப்பாளர் தேவா.

1993ல் தேவா பிரபலமாகிக் கொண்டிருந்த நேரம் மௌனம் ரவி மூலம் அனைத்து சினிமா பத்திரிகையாளர்களையும் வரவழைத்துச் சந்தித்தார். அப்போது இரு கைகளையும் மார்புக்கு மேல் கட்டிக் கொண்டு பேசினார்.

''கைகளைக் கட்ட வேண்டாம். நீங்கள் வழக்கமாக எப்படி நின்று பேசுவீர்களோ அப்படியே பேசுங்கள்'' என்றோம்.

''நான் உங்கள் முன் கை கட்டி நிற்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆறுகோடி தமிழர்கள் முன் என்னை அறிமுகப்படுத்திக் கொள்ள நிற்பதாகவே உணர்கிறேன்'' என்றார்.

## அட்வான்ஸ்

தேவாவுக்குக் கோபம் வராது. அப்படியே வந்தாலும் விழுங்கிக் கொண்டு புன்னகையை வெளியிடுவார். அல்லது பக்கத்து அறைக்குச் சென்று கோபத்தையும், டென்ஷனையும் ஊதித் தள்ளிவிட்டு, வந்தமர்வார். யாரேனும் ஒருநிருபர், ''என்ன அந்தப் பாடலை அப்படியே காப்பி எடுத்திருக்கிறீர்களே'' எனக் குறை சொன்னால், ''இனி அப்படி வராமல் பார்த்துக்கறேன்'' என்பாரே தவிர, 'அந்தப் படத்தின் டைரக்டர் கேட்டதால் போட்டேன்' என்று சொல்லமாட்டார்.

பெரிய டைரக்டராக இருந்தாலும், புது இயக்குநரானாலும் இசையில் எத்தனை மாற்றங்கள் சொன்னாலும் சலிக்காமல் செய்வார்.

''விஸ்வநாதன் - ராமமூர்த்தி பாடல்களை கேட்டுக் கேட்டு இசைவசமானவன் நான். என் ஜீனிலும் தாகம் இருந்தது. என் தந்தை சொக்கலிங்கம் தபேலா ப்ளேயராக இருந்தவர். அவர் வீட்டில் இல்லாதபோது தபேலாவை எடுத்துத் தட்டிப்பார்ப்பேன். அப்படியே கொஞ்சம் கொஞ்சமாய் வாசிக்கக் கத்துக்கிட்டேன்.

இசை மேல் ஏற்பட்ட காதலால் எஸ்.எஸ்.எல்.சி.யோடு படிப்புக்கு குட்பை சொல்லிட்டேன். யாரோட உதவியுமில்லாமல் நானே ஆர்மோனியம் வாசிக்கக் கத்துக் கிட்டேன். வெஸ்டன் இசையில் தன்ராஜ் மாஸ்டர்தான் என்னோட குரு.

ஆரம்பத்தில் அமெச்சூர் நாடகங்



களுக்கு இசையமைத்தேன். அப்புறம் மனோரமா, கருவிராஜன், வி.கோபால கிருஷ்ணன் ஆகியோர் நாடகங்களுக்கு இசையமைத்தேன். நானும் சந்திர போஸும் சேர்ந்து 'போஸாஸ்தேவா' என்ற பெயரில் பல நாடகங்களுக்கு இசையமைத்தோம். இசையில் அதிக ஈடுபாடு கொண்டு உழைத்தாலும், வீட்டில் உட்கார்ந்திருந்த வறுமையை விரட்ட இசையை விட்டு வேறு வேலைகளுக்கும் போனேன்.

1971ல் இங்கிலீஷ் எலெக்ட்ரிகல் கம்பெனியில் வேலையில் சேர்ந்தேன். அடுத்த வருடம் அசோக் லேலண்டில், அதற்கடுத்த வருஷம் பொதுப்பணித்துறை அலுவலகத்தில்; 1974ல் ஐ.ஜி. ஆபீஸில் வேலை, இப்படி வருஷத்துக்கு ஒரு ஆபீஸ் மாறி வந்த எனக்கு 76ல் சென்னை தொலைக்காட்சி நிலையத்தில் நிரந்த வேலை. தள உதவியாளராக நீண்ட காலம் வேலையில்

# 50 பைசா!

இருந்தேன்.

என் இசை ஆர்வத்தை அறிந்த தயாரிப்பாளர் பெருமாள் எனக்கு டி.வி.யில் மியூசிக் ப்ரோக்ராம் செய்ய அடிக்கடி வாய்ப்பளித்தார். நான் அங்கு ஊழியராக இருந்ததால் தனியாக சன்மானம் எதுவும் தரமாட்டார்கள் என்றாலும் என் இசை ஞானத்தை வளர்த்துக் கொள்ள அதைப் பயன்படுத்திக் கிட்டேன். அங்குதான் கவிஞர் காளிதாசன் நட்பு கிடைத்தது. அவர்

**நான் உங்கள் முன்**
**கை கட்டி நிற்கவில்லை.**
**6கோடி தமிழர்கள்**
**முன் நிற்கிறேன்.**

சபீதா ஜோசப்

## எச்சரிக்கை

உங்கள் இமெயிலின் பாஸ்வேர்டைத் தொடர்ந்து 15 நாட்களுக்கு ஒருமுறை மாற்றிக் கொண்டே இருங்கள். யாரும் சுலபமாக யூகிக்கக் கூடிய பாஸ்வேர்டை வைத்துக்கொள்ள வேண்டாம். எழுத்துகள், எண்கள் ஆகிய இரண்டும் கலந்த பாஸ்வேர்டை உருவாக்கிக் கொள்ளுங்கள்.

தான் என்னை சைக்கிளில் உட்கார வைத்துக் கொண்டு ஒவ்வொரு சினிமா கம்பெனியாக அலைந்தார். 1976ல் தொடங்கிய இந்த வாய்ப்புத் தேடல் முயற்சிக்கு 1989ல்தான் பலன் கிடைத்தது.

ஒரு தயாரிப்பாளரை அடிக்கடி போய் வாய்ப்பு கேட்டு வந்தோம். அவர் ஒரு நாள் மகிழ்ச்சியான செய்தி சொன்னார். 'தேவா நாளை மறுநாள் வந்துடுங்க. புது வருஷத்தில் ஒப்பந்தம் போட்டுக்கலாம். அட்வான்ஸ் வாங்கிக்கோங்க'ன்னார். நாங்க சந்தோஷத்துல பறந்தோம்.

அந்த நாளும் வந்தது. அதிகாலை எழுந்து குளித்து சாப்பிடாமல் சைக்கிளில் போய் இறங்கினோம். அட்வான்ஸ் 1001 கொடுப்பாரா? 501 கொடுப்பாரா? 1001 கொடுத்தா இந்தப் பொங்கலுக்கு வீட்டில் எல்லாருக்கும் துணி எடுத்துக் கொடுத்து, கொண்டாடிட வேண்டியதுதான்னு பல கற்பனைகளுடன் போனோம். அவர் கொடுத்த அட்வானைப் பார்த்து நொந்து நொறுங்கிட்டோம். 'நல்ல நாளும் அதுவுமா இந்தா தேவா இதை அட்வான்ஸா வெச்சுக்கோ'னு ரெண்டு 50 பைசா கொடுத்தார். பட்டினியாகவே மறுபடியும் வீட்டுக்கு வந்தோம்.

1989-ல் ஸ்ரீதேவி பகவதி ஃபிலிம்ஸில் இருந்து அழைப்பு வந்தது. 'மேளம் கொட்டு தாலி கட்டு' படத்துக்கு இணை இசையமைப்பாளராகப் பணியாற்றச் சொன்னார்கள். ஒப்புக்கொண்டேன். அங்கு சிவராமதாஸ், ராகவன் தம்பி இருவரும் என்னை ராமராஜன் சாருக்கு அறிமுகப் படுத்தினார்கள். ராமராஜன், இயக்குநர் தினதயாளன் இருவரும் என்னை 'மனசுக் கேத்த மகராசா' படத்துக்கு இசையமைப்பாளராக நியமித்தார்கள்.

தயாரிப்பாளர் அன்பாலயா பிரபாகரனிடம் ராமராஜன் என்னைப் பற்றி சொல்லி, 'மனசுக்கேத்த மகராசா' படப் பாடல்களையும் போட்டுக் காட்டினார். அதை கேட்ட பிரபாகரன் எனக்கு 'வைகாசி பொறந்தாச்சு' படவாய்ப்பைக் கொடுத்தார். இந்தப் படத்தின் மாபெரும் வெற்றிதான், இன்று வரை என்னை இசைப் பயணத்தைத் தொடரச் செய்தது'' என்கிறார் இந்த இசைவசமானவர்.

**(அடுத்த வாரம் : சேரன்)**



''அவர் ஒரு முன்ஜாக்கிரதைப் பேர்வழினு எப்படிச் சொல்றே?''

''கம்ப்யூட்டருக்கு வைரஸ் அட்டாக் ஆகக் கூடாதுன்னு வைரஸ் தடுப்பூசி போட முடியுமானு கேட்கிறாரே!''

– எஸ்.அபிராமி



# கலைஞர்– ராஜேஷ்குமார் கூட்டணி!

''உலகத்தில் முதல் க்ரைம் நாவல் மகாபாரதம்தான்''- க்ரைம் நாவல் எழுத்தாளர் ராஜேஷ்குமாரின் ஸ்டேட்மெண்ட் இது. எப்படி?

''இதில் சகுனி செய்யாத சூழ்ச்சிகளே இல்லை. முதல் பெண் கடத்தலுக்கு உதாரணம் இராமாயணம். சிலப்பதிகாரம் உருவானதற்கு மூலகாரணம் பொற்கொல்லன் செய்த க்ரைம்தான். க்ரைம் என்ற விஷயம் சூழல், காலத்துக்கு ஏற்றாற்போல் மாறி வருகிறது'' என்றார் 'விசாரணை' தொலைக் காட்சித் தொடருக்கான தொடக்க விழாவில்.

ராஜேஷ்குமார் நாவல்கள்தான் 'விசாரணை' தொடராக, கலைஞர் டி.வி.யில் வர இருக்கின்றன. 'சினிமா என்றாலே எனக்குப் பல மைல் தூரம்' என்று சொல்லும் ராஜேஷ்குமார், தமது நாவல்களை க்ராவிட்டி என்டர்டெயின்மெண்ட் நிறுவனம் தொடராக்க இசைந்து விட்டார்.



ராஜேஷ்குமார் நாவல்களில் நாயகனாக வரும் 'விவேக்' கதாபாத்திரத்தில் சாக்ஷி சிவாவும், 'விஷ்ணு'வாக ஷ்யாமும் நடிக்க உள்ளார்கள். கதையின் நாயகன் சிவாவாக இருந்தாலும், பத்திரிகையாளர் சந்திப்பின் நாயகன் ராஜேஷ்குமார்தான்.

''தொடரை வெற்றி பெறச் செய்வார்கள் என்ற நம்பிக்கை, க்ராவிட்டி என்டர்டெயின்மென்ட் மீதும், இயக்குநர் சி.பிரபு மீதும் உள்ளது'' என்கிறார் ராஜேஷ்குமார்.

சி.பிரபு வேறுயாருமல்ல; விஜய் டி.வி. 'நீயா நானா' கோபிநாத்தின் அண்ணன்தான்!

**விழாவில் பிரபலங்கள்...**

**இயக்குநர் சுந்தர் ராஜன்:**

''நாவலை விஷுவல் மீடியாவில் கொண்டு வரும்போது, நாவலாசிரியரின் பங்களிப்பு ஐம்பது சதவிகிதம், நடிகர்களின் பங்களிப்பு ஐம்பது சதவிகிதம் இருந்தால்தான் நாவல் வெற்றி பெறும்.''

**எஸ்.வி.சேகர்:**

''கலைஞரோடு யார் கூட்டணி வைத்தாலும் அது வெற்றிக் கூட்டணிதான். எனவே கலைஞர் டி.வி.யில் வரவிருக்கும் இந்தத் தொடரும் வெற்றி பெறும்.''

**– ராகவ்குமார்**

# கிரேஸியைக் கேளுங்கள்



● ஜி.ரெஜினா பானு, பழனி

**தயிர் சாதத்துக்குத் தொட்டுக்கொள்ள ஒரு சரியான சைட் டிஷ் சொல்லுங்களேன்!**

சொல்ல சங்கோஜமாக இருக்கிறது. ஆவக்காய் ஊறுகாய், பச்சை மிளகாய், வத்தக் குழம்பு போன்ற அடல்ட்ஸ் ஒன்லி ஐட்டங்களைத் தொட்டுக் கொள்பவர்களுக்கு, நான் தொட்டுக் கொள்ளும் பாதாம் அல்வா, கிருஷ்ணா ஸ்வீட்ஸ் மைசூர்பா, எதுவும் இல்லாட்டி சர்க்கரை போன்ற சைட் டிஷ்கள் childish ஆகப் படலாம்.

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

**சூரியன் ஒரு வாரம் லீவு எடுத்துக் கொண்டால் பூமி என்னவாகும்?**

இருட்டில்தான் பாவங்கள் பிரகாசிக்கும். sun-ம், day-யும் இல்லாத அந்த ஏழு நாட்களும் 'sin days' ஆகிவிடும். பூமிக்குத் தலைசுற்றும்.

● மீனா ரெங்கநாதன், மேற்கு மாம்பலம்

**கணவன் மனைவிக்கு ஆற்றும் கைம்மாறு என்ன?**

கணவன் கை மாறாமல் இருந்தால் சரி!

● ஜனனி, எழும்பூர்

**நாடக ஆசிரியர் 'சோ' ஒரு வார்த்தை... அவரைப் பற்றி உங்களின் ஒரு வார்த்தை?**

'பெர்னார்ட்-சோ'

● ஆர்.அஜிதா, கம்பம்

**உங்களுடைய முதல் எதிரி யார்?**

எனக்கு மிஞ்சிதான் எதிரியும், நண்பனும்! தீதும் நன்றும் பிறர் தர வாரா..!

● சந்திரா, தஞ்சை

**கிரேஸி தாடி வைத்தால் எப்படி இருக்கும்?**

வைத்துப் பார்த்தேன்... கோரேந்திர shave ஆகாக இருந்தது!

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

**உங்களின் எடை எவ்வளவு?**

வெய்ட் ப்ளீஸ்... தராசைக் கேட்டுச் சொல்கிறேன்!

● ஆர்.கே.லிங்கேசன், புதூர்

**எது நிவாரணம்? எது நிர்வாணம்?**

போதி மரத்தடியில் புத்தர் கண்ட நிவாரணமே நிர்வாணம்தான்! நிவாரணம் cure; நிர்வாணம் pure...!

● கே.ஆர்.ரவீந்திரன், சென்னை

**பசி வந்தால் பத்தும் பறக்கும்... காதல் வந்தால்?**

பசி வந்த இடத்தில் பட்டாம் பூச்சி பறக்கும்!

● என்.சண்முகம், திருவண்ணாமலை

**கற்பனை இல்லாமல் வாழ முடியுமா?**

அப்படிப்பட்ட ஒரு வாழ்க்கையை என்னால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை!

● என்.ஏ.லதா, பழனி

**கிரேஸி வசனத்தில் திருவிளையாடல் சினிமாவை டிவி சீரியலாக எடுத்தால்?**



* பொன்னாட் 'சோ'

* சுத்த 'லய'ர்

* அலுக்காத அழகு

சம்போ - மெகா - தேவா...!

● **ஆர்.ரங்கநாதன், தி.நகர்**

***கணவனை இழந்தால் 'வாழா வெட்டி'; மனைவியை இழந்தால்...?***

'வாழும் வெட்டி!'

● **வேதவல்லி, சென்னை**

***டிசம்பர் சங்கீத சீஸன் வந்து விட்டது. கச்சேரிக்குப் போவீர்களா...?***

சமீபத்தில் உமையாள்புரம் சிவராமன் அவர்களின் ஆத்ம நிவேதனம் என்ற டி.வி.டி.யைக் கேட்டேன். பிரதோஷ காலத்தில் பார்வதியை ஒரு ஓரமாக நிற்கச் சொல்லிவிட்டு பரமசிவன் நடனமாடுகிறார். எஜமானன் ஆட்டத்தில் மயங்கிய நந்திகேஸ்வரர் மிருதங்கம் வாசிக்க மறந்து விடுகிறார். உடனே மகாவிஷ்ணு, மகாதேவன் ஆட்டத்துக்கு மிருதங்கம் வாசிக்கிறார். அதாவது உமையாள் புறமிருக்க, சிவன் ஆட மகாவிஷ்ணு அம்சமான ராமன் வாசிக்கிறார். உமையாள்புரம் சிவராமன் வாசிப்பைக் கேட்ட எனக்கு, பிரதோஷ தரிசனம் பார்த்த சந்தோஷம் ஏற்பட்டது. சிவராமன் BA.BL., படித்தவர். அவர் லாயராகாமல் மிருதங்க சுத்த 'லய'ராக மாறியது நம் அதிர்ஷ்டம்!

● **பா.அசோக், விருதுநகர்**

***சிவபெருமான் அருந்திய விஷம் மட்டும் தொண்டையைத் தாண்டி இறங்காதது ஏன்...?***

எதுவும் சிவத் தொண்டை மீறிச் செல்லாது!

● **ச.ராஜசேகர், செய்யாறு**

***அலுக்காத அழகு என்பது கறுப்பா? சிவப்பா?***

'பச்சைக்' குழந்தை!



# பட்டாம்பூச்சி பறக்கும் காலம்!



**தமிழ்நதி**
**http://tamilnathy.blogspot.com/**

வழிகள் தொலைந்துபோவதில்லை. அவை அங்கேதான் இருக்கின்றன. மனிதர்கள்தான் தொலைந்து போகிறார்கள். அதுபோலவே வார்த்தைகளும் எடுத்துக் கோக்கப்படக் காத்திருக்கின்றன. நமக்குத்தான் அவற்றைச் சரிவரத் தேர்ந்தெடுக்கவும் கையாளவும் தெரிவதில்லை. மனஅவசம் புழுங்கும் இந்நாளில், தலைவர் பிரபாகரனைப் பற்றி ஏதாவது கதைக்கவேண்டுமென நினைக்கிறேன். உள்ளுக்குள் துயரப்பந்து ஒன்று உருண்டுகொண்டேயிருக்கிறது. ஏற்கவும் மறுக்கவும் முடியாத செய்தியொன்றைக் காவியபடி மனம் அந்தரித்து அலைகிறது.

இந்த உலகில் வாழ்ந்து கொண்டிருக்கிற எல்லோரைக் காட்டிலும் அவரை, நானும் என் போன்றவர்களும் நேசிக்கிறோம் என்பதுதான் உண்மை. ஆனால், அந்த நேசம் என் உயிரைக் காட்டிலும் சற்று குறைந்ததாக இருந்திருக்க வேண்டும். இல்லையெனில், மரங்களைக் காற்று மலர்த்திக்கொண்டிருக்கும் ஆட்களற்ற வெளியொன்றில் மண்ணிலிருந்து நிமிர்ந்த (இப்போது சிதைக்கப்பட்டிருக்கும்) கல்லறைகளின் அடியில் இப்போது நான் உறங்கிக் கொண்டிருந்திருக்க மாட்டேனா?

*(''கார்த்திகை 26 - தேசியத்தலைவருக்கு வயது 55'' பதிவில் இருந்து)*




**உமாஷக்தி**
**http://umashakthi.blogspot.com/**

**சக்திவேலும் டீச்சரும்**

கரும்பலகையில் நிலவு
வரைந்து நட்சத்திரம் என்கிறான்
ப்ரேயர் பாடுகையில்
ஒன்றரைக் கண் திறந்து
பூஜாவின் ஷூவை மிதிக்கிறான்
ஸ்நாக்ஸ் பாக்ஸின் மிச்சத்தை
காக்கைக்குப் போட்டுவிட்டு
அணிலுக்காய் காத்திருக்கிறான்..
கணக்குப் போடச் சொன்னால்
பக்கம் முழுக்க தன் பெயரெழுதி
S for Sakthivel எனக் கத்துகிறான்
அவனுடன் நித்தம் சிறு யுத்தம்
நடத்தும் ஏஞ்சலினா டீச்சருக்கு
பிடித்துத்தானிருக்கிறது
'மிச் சாரி மிச்' குழந்தை நடிகனாய்
கன்னம் குழைந்து இவன்
சிரித்துத் தொலைக்கும்போது!





ஜெயந்தி சங்கர்
http://jeyanthisankar.blogspot.com/

சீனச் சமூகம் ஆணாதிக்கம் நிறைந்த ஒன்றாக இருந்தது. பெண்ணை ஒரு

# கூட்டி வார ஏலும்?

திருமணப்பொருளாக மட்டும் பார்த்தது. கொக்கி வடிவிலுள்ள தாமரைத் தண்டுகளின் (lotus hooks) மேல் இருக்கும் தாமரை மலரைப் போல ஆணின் கண்களுக்கு பெண் தெரியவேண் டும் என்று நினைத்தது அச்சமூகம். மேலும், சிறிய பாதங்களே அழகானதாகவும் நளினமானதாகவும் கருதப்பட்டது. 3-4 அங்குலமே இருக்கும்படி பாதத்தின் வளர்ச்சியைத் தடுக்க பாதங்களை மடக்கி இறுக்கிக் கட்டினார்கள். மூன்று அங்குல மிருந்தால் தங்கத் தாமரை என்றும் நான்கங்குலமிருந்தால் வெள்ளி என்றும் நான்குக்கு மேலிருந்தால் இரும்பு என்றும் அழைத்தார்கள்.

**(''மரணித்த பாதங்கள் '' கட்டுரையில் இருந்து)**

தமயந்தி
http://nizhalvalai.blogspot.com/

**இங்கிட்டு தமயந்தி அங்கிட்டு யாரு?**

1. திருச்செந்தூர் எலெக்ஷன்ல அனிதா ராதாகிருஷ்ணனை வேட்பாளரா அறிவிச்சிட்டாங்க. நல்ல தேர்வு வெற்றி பெற. நேற்று கலைஞர் என்கிட்ட தொலைபேசும்போதும் இதைத்தான் சொன்னேன். அவருக்கு மிகுந்த சந்தோஷம். பாவம் அ.தி.மு.க.காரங்க ரொம்ப முனைப்பா வேலை பாக்காங்க. தேர்தலுக்கு முன்னாலயே துட்டு பாத்துக்கிட்டாங்கன்னா லாபம்தானே!

நெல்லைல ஒரு சிலர் தி.மு.க.ல கூட்டம் கூட்டமா சேர்ந்திருக்காங்க. கந்துவட்டி வழக்குகள்லருந்து தப்பிக்கத்தான் இந்த மாதிரி ஆளுங்கட்சில சேர்ந்திருக்காங்கன்னு சொல்லிக்கிறாங்க. அடுத்த வாட்டி கலைஞர்ட்ட பேசறப்ப இதைச் சொல்லணும். ஞாபகப்படுத்துங்கப்பா...

மாதங்கி
http://clickmathangi.blogspot.com/

**சன்னல் இல்லாத வீடு**

எலியட்ஸ் பீச் மணலில்
மகனுடன் கோட்டை கட்டும்போது
அருகிலேயே விரலால்
வரைந்தாள் ஒரு சிறுமி,
பக்கத்தில் தங்கை.
வீடு வரைகிறாயா?
ஓம்.
அம்மா அதுக்கு கதவு சன்னல் எதுவுமே
இல்லை
இருந்தால் திறந்து சுட்டுவிடுவார்கள்
சிறுமி சொன்னாள்.
அவள் தங்கை சொன்னாள்
சன்னல் கதவு
இல்லாவிட்டால்
தெருவில்
செத்துப்போன
அப்பாவைப் பார்த்து
எப்படி
கூட்டிவார ஏலும்?



# புலிவேட்டை விரதம்!

மகாராஜாவின் புலிவேட்டை விரதம் நன்கு நிறைவேறி வந்தது. பத்து வருஷ காலத்தில் எழுபது புலிகள் வரையில் வேட்டையாடிக் கொன்றுவிட்டார். அதற்குப் பிறகு ஒரு பெரிய இடையூறு எதிர்ப்பட்டது. பிரதிபந்தபுரம் காடுகளில் புலிகளே அற்றுப் போய் விட்டனபோல் தோன்றியது. புலிகள் ஒருவேளை கருத்தடை முறைகளைக் கையாண்டனவோ, அல்லது 'ஹரிகரி' செய்து கொண்டனவோ, அல்லது வெள்ளைக்காரர்களின் கையினால் தான் சாக வேண்டுமென்று ஆசைப் பட்டுக் கொண்டு நாட்டைவிட்டு ஓடிப் போயினவோ, தெரியவில்லை.

மகாராஜா ஒருநாள் திவானைக் கூப்பிட்டார். "திவான் சாகிப், இன்னும் முப்பது புலி இந்தத் துப்பாக்கிக்கு இரையாகித் தீர வேண்டுமென்று உமக்குத் தெரியுமோ, இல்லையோ?" என்று கேட்டார்.

திவான் துப்பாக்கியைப் பார்த்து நடு நடுங்கிக் கொண்டே, "மகாராஜா! நான் புலியில்லை..." என்றார்.

"நீர் புலி என்று எந்த முட்டாள் சொன்னது?"

"இல்லை, நான் துப்பாக்கி இல்லை" என்றார் திவான்.

"நீர் புலியுமில்லை, துப்பாக்கியுமில்லை, திவான் சாகிப்! உம்மைக் கூப்பிட்ட காரணம் வேறு. நான் கல்யாணம் செய்து கொள்வதென்று தீர்மானித்து விட்டேன்" என்றார் மகாராஜா.

திவானுக்கு உளறல் இன்னும் அதிகமாகி விட்டது. "மகாராஜா! ஏற்கெனவே எனக்கு இரண்டு மனைவிகள் இருக்கிறார்கள்; உங்களையும் கல்யாணம் செய்து கொண்டு..."

"சட், என்னங்காணும் உளறுகிறீர்? உம்மை எதற்காக நான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்? எனக்கு வேண்டியது புலி..."

"மகாராஜா! வேண்டாம், யோசனை செய்யுங்கள். உங்கள் குலத்து முன்னோர்கள் சுத்தியைக் கல்யாணம் செய்து கொண்டார்கள். நீங்கள் வேணுமானால் துப்பாக்கியைக் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். இந்த சமஸ்தானத்துக்குப் புலி ராஜா இருப்பது போதும்; புலி ராணி வேறு வேண்டாம்!"

இதைக் கேட்ட மகாராஜா குபீரென்று சிரித்துவிட்டு, "புலியுமில்லை, துப்பாக்கியுமில்லை. மனுஷப் பெண்ணைத்தான்



கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். தற்சமயம் எந்தெந்த சமஸ்தானத்தில் புலி இருக்கிறதென்று முதலில் கணக்கு தயார் செய்யும். பிறகு, புலி இருக்கிற சமஸ்தானத்தில் ராஜ வம்சத்தில் கல்யாணத்துக்குப் பெண் இருக்கிறதா என்று பாரும்'' என்றார்.

திவான் அப்படியே பார்த்தார். கடைசியில் மகாராஜாவின் விருப்பத்தின்படியே புலிகள் நிறைய உள்ள சமஸ்தானத்தில் பெண் பார்த்துக் கல்யாணமும் செய்து வைத்தார்.

மகாராஜா ஜங்ஜங் பகதூர் ஒவ்வொரு தடவை மாமனார் வீடு சென்றபோதும், ஐந்தாறு புலிகளைக் கொன்று, எல்லாப் புலிகளின் தோலும் - சரியாக 99 தோல்- அரண்மனை ஆஸ்தான மண்டபத்தின் சுவர்களை அலங்கரித்தன.

- 'புலி ராஜா' கதையிலிருந்து...

## வண்ணத் தூரிகை



இன்டர்நெட்டை இப்போது முழுமையாகக் கட்டிப்போட்டிருப்பது டிவிட்டர்தான். இதை மைக்ரோ பிளாகிங் என்று சொல்லுகிறார்கள். நடப்பதை நடக்கும் போதே, மற்றவர்களோடு 140 எழுத்துக்களுக்குள் பகிர்ந்து கொள்வது டிவிட்டர். இந்தியாவில் டிவிட்டர் மோகம் காட்டுத் தீ மாதிரி பரவிக்கொண்டு இருக்கிறது.

பாலிவுட் பிரபலங்கள்தான் முதன்முதலில் டிவிட்டர் குளத்தில் குதித்தவர்கள். சசி தரூர் போன்றவர்கள், தங்கள் வாயைக் கொடுத்து மாட்டிக்கொண்டது பின்னால் வந்த கதை. சினிமாக்காரர்களிடம் பிரபலமாக இருப்பது போல், அரசியல்வாதி களிடையேயோ, பிற துறையினரிடமோ டிவிட்டர் இன்னும் பாப்புலர் ஆகவில்லை.

இந்தி சினிமாவின் கான்கள், கபூர்கள் எல்லோரும் டிவிட்டரில் இருக்கிறார்கள். வழக்கம்போல், நடிகர்களைவிட, நடிகை களின் டிவிட்டருக்குத்தான் மவுசு அதிகம்.

டிவிட்டர் மோகம் இப்போது உச்சகட்

# ட்விட்டர்



டத்தை எட்டிவிட்டது. இந்தியில் கிட்டத் தட்ட 50 பிரபலங்களின் டிவிட்டர்கள் இருக் கின்றன. பல பிரபலங்கள், தாங்கள் எழுந் திருப்பது, பார்ட்டிக்குப் போவது, நண்பர் களோடு பேசியது, நிகழ்ச்சிகளில் பங்கேற் பது என்று அத்தனை விவரங்களையும் ரசிகர்களோடு பகிர்ந்துகொள்கிறார்கள். பல பாலிவுட் தயாரிப்பாளர்களுக்கும் இயக்குநர் களுக்கும் இப்போது வயிற்றைக் கலக்க ஆரம் பித்துவிட்டது. டிவிட்டர் பதிவுகள் போடக் கூடாது என்றே பல செட்களில் தடை போட்டி ருக்கிறார்கள்.

ரசிகர்கள், தங்களுக்கு விருப்பமான பிர பலங்களின் டிவிட்டர்களைப் படிப்பதன் மூலம், அவரோடு நெருங்கிப் பழகும் வாய்ப் பைப் பெறுகிறார்கள். ஒரு சில சமயங்களில், ரசிகர்களின் கேள்விகளுக்கு பிரபலங்கள் நேரடிப் பதிலை டிவிட்டரில் தெரிவித்துவிடு வார்கள். அது போதாதா? பர்சனல் டச் கிடைத்து விட்டது.

பிரபலங்கள் இன்னும் ஒரு படி மேலே போய், தங்கள் சொந்த வாழ்க்கை விவரங்களையும் ரசிகர் களோடு பகிர்ந்து

கொள்கிறார்கள். தாங்கள் பார்த்த படங்கள், அடுத்தவரின் நடிப்புத் திறன் போன்ற விஷயங்களைப் பற்றியும் டிவீட் செய்கிறார்கள். ரசிகர்களுக்குக் கொண்டாட்டம்தான்!

**வ**ழக்கம்போல், இன்டர்நெட்டில் இருக்கும் பிரச்னை டிவிட்டரிலும் இருக்கிறது. எழுதுவது உண்மையிலேயே அந்தப் பிரபலம்தானா? யார் வேண்டுமானாலும் யார் பெயரில் வேண்டுமானாலும் டிவிட்டர் பதிவுகள் எழுத முடியும். அப்படியானால், எது உண்மை?

இந்தப் பிரச்னையை, ஓரளவு டிவிட்டரே தீர்த்து வைத்திருக்கிறது. டிவிட்டர், 'வெரிஃபைடு அக்கவுண்ட்' என்றொரு முத்திரை குத்துகிறது. அதாவது, டிவிட்டர் நிறுவனமே ஒரு சில முக்கியப் பிரபலங்களிடம் அது அவர்கள் எழுதும் டிவிட்டர் பதிவுகள்தானா என்று உறுதி செய்துகொண்டு, இந்த முத்திரையைக் குத்துகிறது.

இந்தியில், விவேக் ஓபராய், அக்ஷய் குமார், பிரியங்கா சோப்ரா, மல்லிகா ஷெராவத், கரண் ஜோஹர் டிவிட்டர்கள் இந்த முத்திரையைப் பெற்றிருக்கின்றன.

இந்தியில் அடிக்கும் டிவிட்டர் அலை, தமிழிலும் அடிக்காமல் இருக்குமா? அசின், ஸ்ரேயா, த்ரிஷா, ஷ்ருதி ஹாசன் என்று பலருடைய டிவிட்டர் பதிவுகள் இருக்கின்றன. இதில் இவர்கள் எழுதுவதெல்லாம் எவ்வளவு தூரம் உண்மை என்று தெரியவில்லை. வழக்கம்போல், இவர்களும் இந்தியை அப்படியே பின்பற்றி, தங்கள்

# பிரபலங்கள்!

நினைப்படி வேலைகளை, எண்ணங்களை எல்லாம் எழுதிக்கொண்டு இருக்கிறார்கள்.

தமிழ் நடிகர்களிடம் இன்னும் டிவிட்டர் மோகம் எட்டிப் பார்க்கவில்லை போலிருக்கிறது. யாரும் நேரடியாக இன்னும் டிவிட்டர் பதிவுகள் எழுத ஆரம்பிக்கவில்லை.

இப்போதெல்லாம் ஒவ்வொரு நாளையும் ரசிகர்கள், தங்கள் விருப்பமான ஹீரோக்களின் ஹீரோயின்களின் முகத்தில்தான் விழிக்கிறார்கள். குடும்ப உறுப்பினர்கள் போல் ஆகிவிட்ட உற்சாகம். இருக்காதா பின்னே!

**ஜெனிலியாவின் ஸ்வீட் டிவீட்கள்**

ஜெனிலியாவின் டிவிட்டருக்கும், டிவிட்டர் வெரிஃபைட் முத்திரை இருக்கிறது. 8822 ரசிகர்கள் ஜெனிலியாவின் டிவிட்டர் பதிவுகளைப் பின் தொடர்கிறார்கள்.

Its just 2days since I'm away frm home n I already miss it so much. Guess no matter whr u go, home is just d place dat can nevr b replaced.





# வரைபவர்!

**கோ**வையைச் சேர்ந்த ஸ்ரீ ராம சந்தோஷ் (வயது 26) முறையாக ஓவியம் பயின்றவர். தனிநபர் மற்றும் கூட்டுக் கண்காட்சியில் பங்களித்தவர். 2005 முதல் 2007க்கான மத்திய அரசின் சிறந்த இளம் கலைஞர்களுக்கான ஸ்காலர்ஷிப் பெற்றவர். உருவத்தைவிட உணர்வுகளை வரைய முயற்சிக்கும் இவர் 'கலர் சைக்காலஜி' சம்பந்தமாகவே ஒரு ஓவிய விசாரணையைத் தொடங்கி தமது அபிப்ராயங்களை வண்ணங்களில் பதிவு செய்து வருகிறார். ''ஒரு இலையுதிர் காலத்துத் தனிமையில்தான் என்னை நான் கண்டடைந்தேன். எனது ஓவியங்கள் அந்த இலையுதிர்காலத்தை எதிரொலிப்பவை. அரூப ஓவியத்தோடு நம்மைப் பிணைக்கிற பெயரிடமுடியா ஒரு உயிரோட்டத்தைக் கொண்டு வருவது தான் என் பிரயத்தனம்'' என்கிறார் ஸ்ரீராமசந்தோஷ்.

செய்தி : அமிர்தா

படங்கள் : சின்னராஜ்

* ஸ்ரீ ராம சந்தோஷ்



"நான் அமெரிக்காவில் இருந்த போது, முதன்முறையாக கார் வாங்கினேன். அதற்கு ஒரு பூஜை போட்டுவிட்டு ஓட்ட ஆரம்பிக்கவேண்டும் என்று ஆசை. நான் இருந்த இடத்தில் இருந்து மியாமி வரை போய் ஒரு வட இந்தியப் புரோகிதரிடம் பூஜை போட்டேன். கோயில் இல்லை. குளம் இல்லை. வீடுதான். அதற்கே ஐம்பது டாலர் வாங்கிவிட்டார்! அப்போதுதான் ஏன் நாமே பூஜைக்கான ஒரு வெப்சைட் ஆரம்பிக்கக் கூடாது என்று தோன்றியது. 2000ம் ஆண்டில் நான் இந்தியா வந்தவுடன் முதல்வேலையாக இபிரார்த்தனா டாட் காம் இணைய தளத்தைத் தொடங்கினேன்" என்று உற்சாகமாகப் பேச ஆரம்பித்தார் ஏ.எம்.அறிவுடைநம்பி. (http://www.eprarthana.com)



# ஆன்லைனில்


✱ அறிவுடைநம்பி

முதலில் நூறு கோயில்களோடு ஆரம்பித்த இபிரார்த்தனாவில் இன்று கிட்டத்தட்ட 2000 கோயில்கள் இருக்கின்றன. தமிழகம் மற்றும் ஆந்திராவில் இருக்கும் பெரும்பாலான கோயில்களில், அர்ச்சனைகள் செய்துதர ஏற்பாடு செய்திருக்கிறார்.

"பெரும்பாலும் கோயில் குருக்களே எங்கள் ஏஜெண்டுகளாக இருப்பார்கள். எங்களுக்கு ஆர்டர்கள் வர வர, ஏஜெண்டுகளுக்கு விவரங்களைத் தெரிவித்துவிடுவோம். அவர்கள் அந்தந்தக் கோயில்களுக்கு நேரடியாகப் போய் அர்ச்சனை செய்து, பிரசாதங்களை வாங்கி அனுப்பிவிடுவார்கள். பழனி, திருத்தணி கோயில் குருக்களுக்கு இன்டர்நெட் வசதி உண்டு. அவர்களுக்கு நாங்கள் ஆர்டர்களை இமெயிலிலேயே தெரிவித்துவிடுவோம்.

ஒவ்வொரு மாதமும் எப்படியும் 200

**மக்களின் பக்திக்கு வாகனமாக இன்டர்நெட் உருவெடுத்து இருக்கிறது**

முதல் 250 ஆர்டர்கள் இபிரார்த்தனாவுக்கு வந்துவிடுகின்றன. முன்பெல்லாம் 80 சதவிகித ஆர்டர்கள் வெளிநாட்டில் இருந்து வரும். மிச்சம் இந்தியாவில் இருந்து வரும். இப்போது நிலைமை மாறிவிட்டது. ஐம்பது சதவிகித ஆர்டர்கள் இந்தியாவில் இருந்தே வருகின்றன.''

கணவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த ப்ரீத்தி நம்பி, பேச்சினிடையே சேர்ந்துகொண்டார். இவரும் இபிரார்த்தனாவின் வளர்ச்சியில் முக்கியப் பங்கு வகிப்பவர்.

''இபிரார்த்தனாவின் ஒரே முக்கியச் சிறப்பு அதன் நேர்மைதான். 2000ம் ஆண்டு காலகட்டத்தில், இதேபோன்று இன்னும் இருபது இணையதளங்களேனும் ஆரம்பிக்கப்பட்டன. ஒரு கட்டத்தில் எந்த இணையதளத்தாலும் தாக்குப்பிடித்து நிற்கமுடியவில்லை. ஒரு சிலர், வியாபாரத்தைப் பெருக்க வேண்டும் என்பதற்காக, ஒன்று வாங்கினால், இரண்டு இலவசம் என்ற ரேஞ்சுக்கு கோயில் பூஜைகளை மலினப்படுத்தினார்கள். ஆனால், இபிரார்த்தனா இன்று வரை பக்தியின் கௌரவத்தை, பூஜையின் மதிப்பைக் குறைக்காமல் இருக்கிறது'' என்றார்.

''இது பக்தி, தெய்வம் சம்பந்தமானது. நம்பிக்கை சம்பந்தமானது. தங்களால் நேரடியாக வர முடியவில்லை என்ற காரணத்தால்தான், ஆன்லைனில் பிரார்த்தனைபுக் செய்கிறார்கள். அவர்களை ஏமாற்றுவது, கடவுளை ஏமாற்றுவதற்குச் சமம்.

பூஜையில் வேறொரு விஷயம் இப்போது பிரபலமாகிக்கொண்டு வருகிறது. வெளிநாட்டில் இருக்கும் பலர், இந்தியாவில் இருக்கும் தங்கள் உறவினர்களுக்கு, பெற்றோர்களுக்கு அவர்களுடைய திருமண நாள், பிறந்த நாள் ஆகியவற்றின் போது, ஏதேனும் ஒரு கோயிலில் பூஜை செய்யச் சொல்லி பிரசாதங்களை அனுப்பச் சொல்கிறார்கள். அதனாலேயே நாங்கள் விரைவில், கிஃப்ட் எ பூஜா டாட் காம் என்றொரு இணையதளம் தொடங்கவிருக்கிறோம்'' என்றார் நம்பி.

''ஒரு விஷயத்தைச் சொல்ல மறந்துவிட்டோம். கோயில், பூஜை, பக்தி எல்லாம் 40+ ஆட்களுக்குத்தான் வரும் என்று நீங்கள் நம்பினால், ஸாரி, நீங்கள் முற்றிலும் தவறு செய்கிறீர்கள். எங்களிடம் பூஜைகளுக்கு ஆர்டர் தருகிறவர்கள் பெரும்பாலும் இளைஞர்கள்தான். அவர்களுடைய பக்தி ஆழமானது'' என்று சர்டிஃபிகேட் தருகிறார் அறிவுடைநம்பி.

தெய்வங்களுக்குப் பல வாகனங்கள் உண்டு. இப்போது, மக்களின் பக்திக்கு வாகனமாக இன்டர்நெட் உருவெடுத்திருக்கிறது!

# பிரார்த்தனை!


* ப்ரீத்தி நம்பி

**மிஸ்டர் & மிஸஸ் மேல்மாடி**

**சீக்ரெட் அஃப் ப்ரெய்ன்**

# அவள் அப்படித்தான்!

**ஆண் மூளைக்கும் பெண் மூளைக்கும் இடையிலான பத்து வித்தியாசங்கள்:**

1. ஆண் மூளை, பெண் மூளையை விட அளவில் சற்று பெரிதுதான். ஆனாலும் வயது ஏற ஏற பெண் மூளையை விடச் சுருங்கி விடும்.

2. பெண் மூளை, குளுகோஸை அதிக அளவில் எரிப்பதால் உயர் வெப்ப நிலை யில் இயங்குகிறது.

3. சிந்திக்கும்போது பெண்களே அதிக அளவில் மூளைத் திறனை உபயோகிக் கிறார்கள்.

4. மூளையின் கார்டெக்ஸ் பகுதியில் இருக்கும் இன்பீரியர்-பரைடல் லாபுலே என்ற இடம், பெண் மூளையைவிட ஆணுக்குச் சற்று அகன்று இருக்கும். அதா வது ஸ்பேஷியல் திறனைக் கொடுக்கும் இடம். இதனாலேயே, அறிவியல் மற்றும் கணிதத்தில் ஆண்களின் கை ஓங்கியிருக் கிறது.

5. சாதாரணமாக ஒரு ஆணுக்கு, பதி னைந்து நிமிடத்துக்கு ஒரு முறை பாலுணர்வு தோன்றும். ஆனால் ஒரு பெண்ணுக்கோ ஒரு நாளில் ஒரு முறையோ அல்லது இரண்டு நாட்களுக்கு ஒரு முறையோதான் தோன்றும்.

6. பெண்கள் பேசிக்கொள்ளும்போது மூளையின் மத்தியில் சந்தோஷத்தை ஏற்படுத்தக் கூடிய நரம்புகள் தூண்டப்படு கின்றன. இதனால்தான் பெண் மணிகள் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன.

7. சிசுவாக இருக்கையில் தொந்தரவு தரக்கூடிய சிறு ஒலியைக் கூட, ஆண் குழந்தைகளைவிடப் பெண் குழந்தைகள் எளிதில் கண்டு கொள்ளும். அதனால்தான் கணவனின் கடுமையான குறட்டைச் சத்தத்துக்கு இடையிலும் குழந்தையின் சிறு சிணுங்கலைக்கூடப் பெண்ணால் கண்டு கொள்ள முடிகிறது.

8. ஒரு பெண்ணை இருபது விநாடிகள் கட்டிக் கொண்டிருந்தாலே, ஆக்ஸிடாஸின் என்ற ரசாயனப் பொருள் அவள் மூளையில் சுரந்து விடும். அதனால் கட்டிக் கொண்டி[illegible]ந்தவர் மீது [illegible]ருக்கு அசைக்க [illegible]ாத நம்பிக்கை [illegible] விடும்.



9. பெண்களைவிட ஆண்கள் மிகக் குறைந்த வார்த்தைப் பிரயோகங்களையே உபயோகப்படுத்துகிறார்கள்; உபயோகப் படுத்த முடியும்.

10. மிக மிக முக்கியமான வித்தியாசம் இது. ஆராய்ச்சியாளர்களின் புருவத்தை உயர்த்த வைத்திருக்கும் சமீபத்திய கண்டு பிடிப்பு. அதாவது, பெண்ணுக்கு மூளை யின் முன்பகுதியான செரிபெரல் கார்

டெக்ஸில், நியூரான்கள் எனப்படும் நரம்பு செல்கள் ஆண் மூளையில் இருப்பதை விடக் குறைவாக இருக்கின்றன. இது ஞாபக மறதி போன்ற நோய்கள் பெண்களுக்கு ஏற்பட வழி வகுக்கும்.

**வ**யதாக ஆக மூளையின் நியூரான்கள் அழிவதாலும் அமைப்பில் மாறுதல் ஏற்படுவதாலும் ஞாபக மறதி ஏற்படுவது இயல்பான ஒன்றுதான். அதற்காக எல்லோருக்கும் வந்தே ஆக வேண்டிய



அவசியம் இல்லை.

“**ஐ**யோ என்ன அனு, ரைட்ல திருப்பச் சொன்னா லெஃப்ட்ல ஒடிக்கற. லெஃப்ட்ல திருப்பச் சொன்னா ரைட்ல இண்டிகேட்டரைப் போடற. இதுக்குத்தான் நான் அப்பவே சொன்னேன். உனக்கு இதெல்லாம் வராதுன்னு. ரொம்பக் கஷ்டம்மா'' என்று புது மனைவியிடம் கெஞ்சிக் கொண்டிருந்தான் சூரஜ்.

ஒரு பெண்ணிடம் சென்று திடீரென்று உங்கள் இடது கையைக் காமிங்க என்று கேட்டுப் பாருங்க. ஐம்பது சதவிகிதப் பெண்கள் வலது கையைத்தான் நீட்டுவார்கள்.

உலகம் முழுக்க ஆண் சமுதாயமே பெண்ணைக் காட்டிக் குற்றம் சாட்டும் விஷயம் இது. அவளுக்கு ஆணைப்போல உடனடியாக லெஃப்ட், ரைட் பிரித்தறிய முடியாது. அவள் மூளையின் அமைப்பு அப்படி.

பெண்ணின் மூளையின் வலது, இடது அறைக்கோளங்கள் ஆணைவிட நன்கு கனெக்ட் செய்யப்பட்டுள்ளன என்று ஏற்கெனவே பார்த்தோம். அதனால் இடது அல்லது வலதைத் தேர்வு செய்ய சிறிது தடுமாற்றம் ஏற்படுவது இயல்பு.

ஆணுக்கு இச்செயலைச் செய்வது எளிது. ஏனெனில் வலது பக்க அறைக்கோளமும் இடது அறைக்கோளமும் கிட்டத்தட்ட தனித் தனியாகத்தான் அவனுக்கு இயங்குகின்றன.

டாக்டர் ஏ.வி.ஸ்ரீனிவாசன்

‘ஆணுக்கு டிரைவிங் என்பது அவனது ஸ்பேஷியல் திறனை சுற்றுப்புறச் சூழலுக்குத் தகுந்தவாறு நிர்ணயிக்கும் ஒரு செயல்பாடு. பெண்ணுக்கு டிரைவிங் என்பது, குறிப்பிட்ட இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குச் சென்றடையும் செயல் அவ்வளவே.

'என்னங்க, கொஞ்சம் முன்னாடியே ப்ரேக் போட்டிருக்கக்கூடாதா?, நல்ல வேளை தப்பிச்சோம்' என்பாள். அவன் சரியாகத்தான் செய்திருப்பான். இங்கு அவனது ஸ்பேஷியல் திறன்தான் பேசப்படும்.



**ம**னித மூளையை இயக்க இன்றியமையாதவை நியூரான்கள். கரு தாயின் வயிற்றில் இருக்கும்போதே இவை உருவாகின்றன. ஒரு மனிதன் இயல்பாக இயங்க ஒரு நொடியில் 2500 நியூரான்கள் உருவாக வேண்டும். கரு உருவான முதல் 90 நாட்களுக்குள் இது உருவாகி இருக்க வேண்டும். கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள். மொத்தம் 240 கோடி நியூரான்கள். தலை சுற்றுகிறதா?

கார்கள் பார்க் செய்யப்பட்டிருக்கும் விதத்தை வைத்தே இது ஆண் பார்க் செய்ததா, பெண் பார்க் செய்ததா என்று சொல்லி விடலாம். இது குறித்து யு.கே., சிங்கப்பூர் போன்ற நாடுகளில் டிரைவிங் பள்ளியில் ஒரு கணக்கெடுப்பு மேற் கொண்டனர்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித் தனியாக வண்டியைப் பின்னுக்குத் தள்ளி நிறுத்த (ரிவர்ஸ் பார்க்கிங்) கட்டளை இடப்பட்டது. 82% துல்லியமாக ஆண்கள் பார்க் செய்தனர். ஆனால் வெறும் 22% துல்லியமாக மட்டுமே பெண்களால் ரிவர்ஸ் பார்க் செய்யப்பட்டது. இதற்கு அவர்களின் ஸ்பேஷியல் திறன் குறைவே காரணம்.

டிரைவிங் பள்ளியில் டிரைவருடன் செயல்பட்ட பெண்கள் கச்சிதமாக நிறுத்தி னார்களாம். ஆனால் அவர்கள் தனியே செயல்பட்டபோது முடியவில்லையாம். இதிலிருந்து, பெண்கள் எளிதில் கற்றுக் கொண்டு பிரதிபலிக்க முடியும். ஆனால் சூழ்நிலைக்கேற்ப தீர்மானித்துச் செயல்பட ஆண்களைப் போல முடியாது என்று அறியப்பட்டது. ஏனெனில், கோணம், தூரம் எல்லாவற்றையும் கணக்கெடுத்துச் செயல்பட ஆணைப்போல அவளால் முடி யாது. இரண்டு கார் நிறுத்தக்கூடிய இடத் தில் பார்க் செய்து விட்டு நடையைக் கட்டி விடுவாள்.

ஆனால் முக்கியமாக ஒன்றைச் சொல்லியே ஆக வேண்டும். பெண்கள் மிகப் பாதுகாப்பான டிரைவர்கள். ஒரு பெண் ஓட்டிய வாகனம் மோதி விபத்து என்பது மிகவும் குறைவு. ஏன்? அவள் முடிவு எடுக்கும் முன்பு சற்று நிறுத்திச் செயல்படுவாள். ஆணைப் போல் அதிக வேகமும் இருக்காது.

அதெல்லாம் இருக்கட்டும். அவளுக்கென்று உள்ள பிரத்யேக மான ஒரு சக்தியைப் பற்றி அடுத்த வாரத்தில் பார்க்கலாம்.

**(அலசுவோம்)**

எழுத்தாக்கம்: **லக்ஷ்மி மோகன்**



"இணையத்துல இனிப்புங்கிற பேர்ல கதை எழுதினது தப்பாப் போச்சு."

"ஏன்... என்னாச்சு?"

"'ஈ' மெயில்களாக வந்து மொய்க் குது."



"விஷயம் தெரியுமா? அந்த இன்டர்நெட்ல கிடைச்ச மாப்பிள் ளைக்கும் கம்ப்யூட்டர்லேயிருந்து வைரஸ் பரவிடுச்சாம்."

- சூர்யாவாணி

# திருச்செந்தூரில் நடப்பது நகைச்சுவை தேர்தல்தானே?



* ஜூனியர் குறிப்பீடு!



* விட்டுப் போன விவரணை!

● பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? ''எப்போது உடைகளை அணிகிறோமோ, அப்போது பொய்யான குணாதிசயங்கள் நம்முடன் வந்துவிடுகின்றன. உடைகள் எதுவும் இல்லாமல் இருக்கும்போதுதான் நாம் மிகவும் வெளிப்படையாக இருக்கிறோம்'' என்று மாடல் அழகி பத்மாலக்ஷ்மி சொல்கிறாரே...?

! திகம்பர சன்னியாசிகள், சித்தர்கள் போன்றோர் உயர்நிலையில் ஆடை துறப்பதற்கும் மாடலிங்குக்காக ஆடை துறப்பதற்கும் வித்தியாசம் உண்டு. முன்னது துறவு; பின்னது பணத்தாசை. பத்மலட்சுமி அபத்த வாதங்களால் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்ளலாம்; பிறரை ஏமாற்ற முடியாது.

● ஜி. ரெஜினா பானு, பழனி

? 293 ரன்கள் எடுத்து, உலக சாதனை படைக்கும் வாய்ப்பை ஏழே ரன்களில் தவற விட்டுவிட்டாரே சேவாக்?

! ''300 ரன் குவிப்பதை ஏழு ரன்களில் தவற விட்டவர்கள் அதிகம் பேர் இல்லை என்பதால் எனக்கு ஏமாற்றமில்லை'' என்று அவரே சொல்கிறார். மேலும், டெஸ்ட் ரேங்கிங்கில் இந்தியா முதல்முறையாக முதலிடம் பெற அவருடைய ஆட்டம்தான் பெரிதும் உதவியிருக்கிறது. இழப்பு சிறிது; சிறப்பு மிகப் பெரியது.

● பி.செந்தில்வேலன், அறந்தாங்கி

? கேட்ட கேள்விக்குப் பதில் தெரியாததால் நாடாளுமன்றக் கூட்டத்துக்கு வராத அமைச்சர்; கேள்வி எழுப்பிய எம்.பி.க்கள் வராததால் பாராளுமன்ற ஒத்திவைப்பு - என்ன பாவம் செய்தது பாராளுமன்றம்?

! பாராளுமன்றம் பாவம் செய்யவில்லை. வோட்டுப் போட்டவர்களுக்கு துரோகம் செய்யும் இந்த உறுப்பினர்கள்தான் பாவம் செய்தவர்களாகிறார்கள்.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

? வன்னியர் சங்கத்துச் சொத்துக்களை எடுத்துக்கொண்டதாகக் குற்றச்சாட்டு எழுந்துள்ளது பற்றி ராமதாஸிடம் கேட்டால், ''எலும்பு பொறுக்கித் தின்னும் தெரு நாய்களுக்கெல்லாம் நான் பதில் சொல்ல மாட்டேன்'' என்று சொல்கிறாரே?

! இப்படி அநாகரிகமாகக் கோபப்படுவது

## நீங்கள் கேட்டவை - தராசு

பதில் கூற இயலாமையின் அடையாள மாகக் கருதப்படும்.

● **அதிபன், ஈரோடு**

*? "தெலுங்கானா தனி மாநிலத்துக்கு அரசு உறுதியளிக்காவிட்டால் காங்கிரஸ் தலைவர்களின் வீடுகளை அடித்து நொறுக்குவோம்" என்று தெலுங்கானா ராஷ்ட்ரீய சமிதி கட்சி முன்னணித் தலைவர் ராஜேந்தர் கூறியுள்ளது பற்றி...?*

! தெலுங்கானா பகுதி வளர்ச்சி பெறவில்லை என்பதை வலியுறுத்தி கோஷம் எழுந்தபோதே கவனம் செலுத்தியிருந்தால் பிரச்னை இப்படி விபரீத வடிவம் எடுத்திருக்காது. பீஹார் மாநிலப் பிரிவினைக்கு ஒப்புதலளித்த மத்திய அரசு, ஆந்திர மாநிலப் பிரிவினைக்கு எப்படி சிவப்புக் கொடி காட்ட முடியும்?



● தழைக்கும் மரபு



● அநாகரிகக் கோபம்!



● வேதனைத் தேர்தல்!

● **பா.அச்சுதன், வயலூர்**

*? லால்குடி என்றதும் உங்கள் நினைவுக்கு வருவது எது...?*

! இனிய வயலின் நாதம் மட்டுமல்ல; தியாகய்யர் காலத்திலிருந்து வாழையடி வாழையாகத் தழைத்து வந்துள்ள ஓர் உன்னதமான இசை மரபு.

● **எம்.ஏழுமலை, அக்ரஹாரம்**

*? திருச்செந்தூர், வந்தவாசி தொகுதிகளில் கலைஞர் காப்பீட்டுத் திட்டத்துக்குத் தடை விதிக்க தேர்தல் கமிஷன் மறுத்துவிட்டதே... இது ஆளுங்கட்சிக்குச் சாதகமானது என்று எதிர்க்கட்சிகள் வாதிட வாய்ப்புள்ளதே... தேர்தல் கமிஷனின் இந்த நடவடிக்கை சரிதானா?*

! தடை விதிக்க மறுக்கவில்லை. அபாய கட்டத்தில் இருப்பவர்கள் மட்டும் உரிய வருமானச் சான்றிதழைக் காட்டி சிகிச்சை பெறலாம் என்றுதான் கமிஷன் தெரிவித்துள்ளது.

● **ஜெ.துரைராஜ், சென்னை - 87**

*? வரும் ஜூனுக்குப் பிறகு, கலைஞர் அரசியலிலிருந்து விலகி, ஏழைகளுக்காகப் பாடுபடப் போவதாக அருந்ததியர் எடுத்த பாராட்டு விழாவில் கூறியுள்ளாரே?*

! அதான் 'ஓய்வுக்கு ஓய்வு கொடுப்பவர் என் தந்தை' என்று ஸ்டாலின் சொல்லி விட்டாரே. கலைஞரின் பேச்சை சீரியஸ்ஸா எடுத்துக்காதீங்க.

● **எஸ்.ஆர்.ஸ்வாமி, திருநெல்வேலி**

*? இயற்கை உரங்கள் பயன்படுத்துவதால் மீத்தேன் வாயு வெளிப்படுகிறது. ஆகவே அதைக் குறைக்க இந்தியாவுக்கு வேண்டுகோள் விடப்பட்டிருப்பது குறித்து...?*

! நாம் பயன்படுத்தும் இயற்கை உரங்

களிலிருந்து வெளிப்படுவதைக் காட்டிலும் பல்லாயிரம் மடங்கு அதிகமாக மீத்தேன், பல நாடுகளின் பண்ணைகளில் வளரும் கால்நடை சாணத்திலிருந்து வெளிப்படுகிறது. தினமணி தலையங்கத்தில் கூறியிருப்பதுபோல, இந்தியா மட்டுமின்றி உலகமே சைவத்துக்கு மாறுவதால் கணிசமான பயன் இருக்கும்.



★ ஏமாற்றுத் தத்துவம்!

களுக்கு அவமதிப்பு. இந்தச் சம்பவத்தை, பாலில் கலந்த துளி விஷமாகக் கருத வேண்டாம். சூரியனில் கூடக் கரும்புள்ளிகள் உண்டு என்பதை நினைவில் கொண்டால், இந்நிகழ்ச்சி நம் உள்ளத்தை அதிகம் பாதிக்காது.

● எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர் ★

● பி.கோபி, கிருஷ்ணகிரி

? 'நாட்டில் உள்ள மொத்த சொத்துக்களில் 25 சதவிகிதம் ஒரு சில குடும்பங்களின் சொத்தாக உள்ளது' என்று கனிமொழி கூறியிருக்கிறாரே?

! கணக்கு சற்று முன் பின்னாக இருக்கலாம்; ஆனால், கருத்து சரிதான்... பல குடும்பங்கள் உழைத்து அதைச் சேர்த்தன; சில குடும்பங்கள் அதிர்ஷ்டத்தால் பெற்றன; பெரும்பாலான அரசியல் குடும்பங்கள் முறைகேடாகச் சேர்த்தன என்பதையும் விவரித்திருக்கலாம்.

? திருச்செந்தூர் இடைத் தேர்தல் தேவையில்லாத ஒன்று. கட்சி மாறிய அ.தி.மு.க எம்.எல்.ஏ இப்போது தி.மு.க. வேட்பாளர்! இதை நகைச்சுவைத் தேர்தல் என்று சொல்லலாமா?

! இல்லை; வாக்காளர்களுக்கு இழைத்த நம்பிக்கை துரோகத்தால் விளைந்த வேதனைத் தேர்தல்.

❐ ரூ 150/- பரிசு பெறுபவர்:
**எஸ்.ஆர்.ஸ்வாமி, திருநெல்வேலி**

★ ரூ.75 பரிசு பெறுபவர்:
**எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்**

● எம்.ராஜேந்திரன், லால்குடி

? கோயில் அர்ச்சகர் தேவநாதனின் காதல் லீலைகள் பற்றி...?

! அவரை அர்ச்சகர் என்றும் அவரது செயல்களைக் காதல் என்றும் சொல்வதே அச்சொற்

★ பிளஸ்ஸான மைனஸ்!



● ஜி.ஜெயராமன், கூத்தலூர்

? எல்லா திருமணங்களும் கட்டாயமாகப் பதிவு செய்யப்பட வேண்டும் என்கிற தமிழக அரசு உத்தரவு அமுலுக்கு வந்துள்ளதே?

! பெண்களுக்குச் சட்டரீதியான பாதுகாப்பளிக்கும் என்கிற அளவில் சரிதான். ஆனால், அது மட்டும் போதாது; சமுதாயம் பெண் உரிமைகளை மதித்துப் பாதுகாக்கும் சூழல் வர வேண்டும். ◎

இன்டர்நெட் பிரபலமாகத் தொடங்கி, பெரும் பாய்ச்சல்களை உருவாக்கியதும், பல மைல் கற்கள் உருவானதும் கடந்த பத்தாண்டுகளில்தான். தி இண்டர்நேஷனல் அகாடமி ஆஃப் டிஜிட்டல் ஆர்ட்ஸ் அண்ட் சயன்ஸ், வெப்பி அவார்டுகளை வழங்கி வருகிறது. சமீபத்தில், மக்கள் வாழ்வில் பெரும் மாற்றங்களை ஏற்படுத்திய பத்து இன்டர்நெட் சாதனைகளை அது பட்டியல் இட்டிருக்கிறது.

**1. கிரைக்லிஸ்ட் (2000)**

இலவச வரி விளம்பர இணையதளமான கிரைக்லிஸ்ட்-ஐ முதலில் சான் பிரான்சிஸ்கோவில் 1995ல் கிரைக் நியூமார்க் தொடங்கினார். 2000த்தில்தான் அதன் வீச்சும் பலமும் அனைவருக்கும் புரிந்தன. இன்று 70 நாடுகளில் 700 நகரங்களில் கிரைக்லிஸ்ட் இருக்கிறது. அதில் நீங்கள் எதைப் பற்றி வேண்டுமானாலும் தேடலாம்; எந்த பொருள் குறித்தும் வரிவிளம்பரம் செய்யலாம்.

**2. கூகுள் ஆட்வேர்ட்ஸ் (2000)**

கூகுள் ஆட்வேர்ட்ஸ் திட்டம் உங்கள் பொருட்களுக்கு ஏற்ப, நீங்களே சரியான சொற்களைத் தேர்ந்தெடுத்து, மக்கள் தேடும்போது, பொருளின் விளம்பரத்தைப் போட வைக்கும் முறை.

**3. விக்கிபீடியா (2001)**

இண்டர்நெட் பயனர்கள் தங்களுக்காக தாங்களே கூட்டு முயற்சியில் தயாரித்த முதல் ஆன்லைன் கலைக் களஞ்சியம் இது. இப்போது 271 மொழிகளில், 1.4 கோடி கட்டுரைகள் விக்கிபீடியாவில் இருக்கிறது என்றால், அதன் வளர்ச்சியை நீங்கள் புரிந்து கொள்ளலாம்.




**4. நாப்ஸ்டர் - மூடப்பட்டது (2001)**

நண்பர்களிடையே இசையைப் பகிர்ந்து கொள்ளும் இணைய தளம் நாப்ஸ்டர். மிகவும் பாப்புலராக இருந்த இத்தளத்தில் பலர் காப்புரிமையை மீறி பல இசைத் தட்டுகளை அப்படியே வலையேற்றினார்கள். அதனால், நாப்ஸ்டர் மீது வழக்குகள் பதிவாகி, அதை முழுவதும் இழுத்து மூட வேண்டிய நிலை ஏற்பட்டது.

**5. கூகுள் பங்குவிற்பனை (2004)**

2004இல் கூகுள் நிறுவனம், தங்களுடைய பங்குகளை மக்களிடம் விற்பனை செய்யத் தொடங்கியது. சொன்னால் நம்பமாட்டீர்கள், கூகுளில் ஆரம்பத்தில் இருந்து வேலை செய்தவர்கள் எல்லாம் கோடீஸ்வரர்கள் ஆனார்கள். இன்றைக்கு உலகில் உள்ள முக்கியமான நிறுவனங்களில் ஒன்று கூகுள்.

**6. ஆன்லைன் வீடியோ புரட்சி (2006)**

உலகெங்கும் பிராட்பேண்ட் வந்து விட்டது. வீடியோ கேமராவின் விலையும் சரிந்துவிட்டது. அதற்கு மேல் யுடியூப் மாதிரியான சேவையும் இருந்தால், வீடியோ புரட்சி ஏற்படாமல் என்ன ஆகும்? உலகெங்கும் என்னவிதமான திறமை உடையவர்களும் தங்கள் திறமைகளைப் படம் பிடித்து, யுடி




மைல்

யூப்பில் போட ஆரம்பித்து விட்டார்கள்.

**7. ஃபேஸ்புக்**

2006 இணையப் புரட்சிகளுள் ஒன்று ஃபேஸ்புக். யார் வேண்டுமானாலும் ஃபேஸ்புக்கில் சேரலாம். 13 வயதுக்கு மேல் ஆன, சரியான இமெயில் ஐடி உடைய யாரும் இதில் சேரலாம். இதில் உலகெங்கும் 300 மில்லியன் உறுப்பினர்கள் இருக்கிறார்கள்.

**8. ஆப்பிள் ஐஃபோன் (2007)**

2007ஆம் ஆண்டு, ஆப்பிள் நிறுவனம் தமது முதல் ஐஃபோன் மாடலை விற்பனை செய்யத் தொடங்கியது. முதன்



முறையாக செல்பேசியிலேயே வயர்லெஸ் இன்டர்நெட் கனெக்ஷன் வசதி கொண்ட மொபைல் இது. அறிமுகமான 74 நாட்களில், பத்து லட்சம் ஃபோன்கள் விற்பனை ஆகின. இப்போது கிட்டத்தட்ட 4 கோடி ஐஃபோன்கள் மார்க்கெட்டில் இருக்கின்றன.

**9. அமெரிக்க அதிபர் தேர்தல் (2008)**

முதல் முறையாக அமெரிக்க அதிபர் தேர்தலில் இணையம் முழுமையாகப்



பயன்படுத்தப்பட்டது. வாக்காளர்களிடம் ஒபாமா இணையம் வழியாகவே நெருங்கி விட்டார். சோஷியல் நெட்வொர்க்கிங் வலைத்தளங்கள், டிவிட்டர், ஃபேஸ்புக், யுடியூப் எதிலும் ஒபாமாதான்! இளைய தலைமுறை அமெரிக்கர்களை, இன்டர்நெட் வழியே போய்ச் சேர்ந்தார்.

இனி இணையம் இல்லாமல் தேர்தல் இல்லை என்கிற அளவுக்கு, தேர்தலின் முகமே மாறிவிட்டது.

**10. ஈரான் தேர்தல் (2009)**

ஈரான் அதிபர் தேர்தலில் நடைபெற்ற ஊழல்களை எதிர்த்து நாடே வெகுண்டு எழுந்தது. இதை டிவிட்டர் புரட்சி என்றே சொல்லவேண்டும். ஈரானியர்கள் ஆயிரக்கணக்கில் தங்கள் நாட்டில் நடைபெற்ற அக்கிரமங்களை உடனுக்குடனே டிவிட்டரில், எழுதிக்கொண்டே இருந்தார்கள். ஈரான் அரசு அவர்களுடைய குரல்வளையை நெறிக்க முடியாமல் தவித்துப் போனது.

சொல்லப் போனால், அப்போது டிவிட்டர் இணைய தளத்தில் ஏதோ ஒரு தொழில்நுட்ப வேலை நடக்கவேண்டி இருந்தது. அமெரிக்க அரசாங்கம், டிவிட்டர் நிறுவனத்தைக் கூப்பிட்டு, ''இப்போது ஏதும் குளறுபடி செய்துவிட வேண்டாம். ஈரானியர்கள் எழுதுவது முக்கியம். அதை அப்படியே விட்டுவிடுங்கள்'' என்று கட்டளையே இட்டது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள்!

# கற்கள்!



* தே.மு.தி.க. - ஜனார்த்தனம்

**வந்தவாசி** தொகுதியிலுள்ள மக்கள் மிரண்டு போயிருக்கிறார்கள். பின்னே இருக்காதா? சர், சர்ரென்று க்வாலிஸ்களும் சுமோக்களும் சாலை வசதி சரியில்லாத கிராமங்களில்கூட புகுந்து வந்தால் மிரளாமல் என்ன செய்வார்கள்? பெரும்பாலான வாகனங்களில் தி.மு.க. கொடிதான் என்பதைச் சொல்லத் தேவையில்லை. பத்து மாவட்டங்களைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான தி.மு.க. பிரமுகர்கள், அமைச்சர்கள் துணையுடன் வந்தவாசியில் முகாமிட்டிருக்கிறார்கள். ஊராட்சித் தலைவர்கள், கிராமத்தின் முக்கியப் பிரமுகர்கள் ஆகியோருக்கு ஸ்பெஷல் கவனிப்பு. "என்ன தேவை?" என்று ஆளும்கட்சி சார்பில் ஒருவர் மாற்றி ஒருவர் வந்து விசாரித்துப் போகிறார்கள். இந்த அமர்க்களத்தில் அ.தி.மு.க.வும், தே.மு.தி.க.வும் திகைத்துப் போய் நிற்கின்றன.



* குமணி

ஒன்றே முக்கால் லட்சம் வாக்காளர்கள் உள்ள வந்தவாசி தொகுதியில் கிட்டத்தட்ட 27 சதவிகிதம் வன்னியர்கள்; 22 சதவிகிதம் தலித்துகள்; 15 சதவிகிதம் இஸ்லாமியர்கள். 2001ல் ஜெயலலிதாவோடு கூட்டணியில் இருந்த பா.ம.க வென்றது. 2006ல் பா.ம.க ஆதரவோடு தி.மு.க. வென்றது. ஆனால் இடைத்தேர்தலை அணுகுகின்ற யுக்தியே மாறிப்போன இந்தக் கட்டத்தில் பழைய

## இடைத்தேர்தல் பாலிடிக்ஸ்

இடைத்தேர்தல் பாலிடிக்ஸ்

# ஜெயிக்கப் போவது நிஜமா? நிழலா?

*இடைத்தேர்தல் புண்ணியத்தில் ஜோதிடர்கள் அதிகமாகிவிட்டனர் **திருச்செந்தூர்** தொகுதியில். 'ஜெயிக்கப் போவது அனிதாவா? அம்மனா?' என்று ஆளாளுக்கு ஆருடம் சொல்லிக் கொண்டிருக்கின்றனர்.*

*அனிதா ராதாகிருஷ்ணனை அரசியலுக்கு அழைத்து வந்தவரே அம்மன் நாராயணன். தற்போது அ.தி.மு.க.வின் வேட்பாளர். ஆனால், தொகுதிக்குள் கடந்த பத்தாண்டுகளில் (2001, 2006ல் தொகுதியின் எம்.எல்.ஏ) தமது செல்வாக்கை நிலைநிறுத்திக் கொண்டுள்ளார் அனிதா.*



* முருகானந்தம்

*தி.மு.க. வேட்பாளர் அனிதா ராதாகிருஷ்ணன், அ.தி.மு.க. வேட்பாளர் அம்மன் நாராயணன், தே.மு.தி.க. வேட்பாளர் கோமதி ஆ.கணேசன், மூவருமே தொகுதிவாசிகள்.*

*''மும்முனைப் போட்டி என்றாலும், நிஜமான போட்டி இரு தரப்*



* அனிதா ராதாகிருஷ்ணன்

# மாத்தியோசிக்குமா வந்தவாசி?



* அமைச்சர் வேலு - வேட்பாளருடன்



* ரவி

கதைகளையும் ஜாதிப்பிரிவுகளையும் பேசிக் கொண்டிருப்பதில் எந்தப் பயனுமில்லை.

**கீ**ழ் வெள்ளிப்புலம் என்ற உள்வாங்கிய கிராமம். பெரும்பான்மையோர் வன்னியர்கள். அ.தி.மு.க. வேட்பாளர் முனுசாமி கடுப்படிக்கும் வெயிலில் வேர்த்து விறுவிறுக்க வாக்கு கேட்டுக் கொண்டிருந்தார். அவரை வாகனத்திலிருந்து இறக்கி ஓரம் கட்டினோம். ''பணம் இங்கே வெள்ளமாகப் பாயத் தொடங்கிவிட்டது. கூடவே அதிகார துஷ்பிரயோகம். மக்கள் ரொம்பவே வெறுப்பில் இருக்கிறார்கள். காரணம் விலைவாசிதான். அம்மா ஆட்சியில் (2005) கிலோ பத்து ரூபாய்க்கு விற்ற அரிசி இப்போது 35 ரூபாய். அது மட்டுமா? பருப்பு, எண்ணெய் என்று எல்லாம் எளிய மக்களுக்கு எட்டாத விலை. இந்த முறை வந்தவாசி மாத்தி யோசிக்கும். 2011ல் அம்மா ஆட்சி மீண்டும் மலர வந்தவாசி திருப்புமுனையாக இருக்கும்'' என்று முகத்தைத் துடைத்துக்கொண்டு மீண்டும் வாக்கு கேட்கப்

## இடைத்தேர்தல் பாலிடிக்ஸ்

இடைத்தேர்தல் பாலிடிக்ஸ்

புக்குள் மட்டுமே. நிஜத்துக்கும் (அனிதா), நிழலுக்கும் (அம்மன்) இடையேதான்'' என்கிறார் ஒருவர். சட்டமன்றத் தேர்தலில் மூவாயிரம் வாக்குகள் மட்டுமே பெற்ற தே.மு.தி.க பாராளுமன்றத் தேர்தலில் பெற்றது ஒன்பதாயிரம் வாக்குகள். ''அ.தி.மு.க. இங்கு நேரடியாகக் களமிறங்கியிருப்பதால், தே.மு.தி.க ஆறாயிரம் வாக்குகள் பெறுமா என்பதே சந்தேகம்!'' என்கிறார் திருச்செந்தூர் கடைவீதியில் ம மாஸ்டராக வேலை செய்யும் முருகானந்தம்.

**தி**ருச்செந்தூர் சட்டப் பேரவைத் தொகுதி சுமார் ஒரு லட்சத்து நாற்பதாயிரம் வாக்காளர்களை உள்ளடக்கியது. ''ஒன்பதாயிரம் வாக்காளர்களுக்கு ஒரு மாவட்டக் கழகம் என, பதினைந்து மாவட்டக் கழகச் செயலாளர்களைத் திருச்செந்தூர் தொகுதிக்குள் களமிறக்கியுள்ளது தி.மு.க. அதன் அமைச்சர்கள் படையெடுப்பும் 'கவனிப்பும்' நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. இதற்கு நாங்களும் சளைத்தவர்கள் அல்ல என்கிறவிதமாக அதகளப்படுத்தி வருகிறது அ.தி.மு.க.'' என்கிறார் ஒருவர்.

''இது அ.தி.மு.க. கோட்டை

* நாராயணன் (அ.தி.மு.க)



* லட்சுமி



புறப்பட்டார் முனுசாமி.

அவர் சொல்வது ஓரளவு சரிதான். பெண்கள் மத்தியில் விலைவாசி ஒரு பெரிய பிரச்னையாக உருவாகியிருக்கிறது. வெள்ள மலை கிராமத்தில் குழாயில் தண்ணீர் பிடித்துக்கொண்டிருந்த ருக்மணி குமுறி விட்டார். "ஒரு ரூபாய் அரிசி போட்டால் போதுமா? காய்கறி, மளிகை சாமான் எல்லாம் வாங்கற விலையிலா

## வந்தவாசி


* காளி

இருக்கு? என் கணவர் மளிகைக் கடையில் வேலை செய்கிறார். எங்களுக்குத் தினசரி 30 ரூபாய் தேவையாய் இருக்கு. இந்த விவகாரம் பெண்கள் மனத்தில் எரிமலையாய் இருக்கு. ஆனால் தேர்தலில் எப்படி வெளிப்படும் என்பதைச் சொல்ல முடியாது" என்றார் ருக்மணி. அவர்கூட இருந்த நான்கு பெண்மணிகளும் அவருக்கு 'ஓ' போட்டார்கள்.

தே.மு.தி.க. வேட்பாளர் ஜனார்த்தனம் வாச்சனூர் பகுதியில் வோட்டு வேட்டை யாடிக்கொண்டிருந்தார். "சுவரில் எங்கள் சின்னங்களை தி.மு.க.வினர் அழிக்கிறார்கள். நான் போகிற இடங்களில் எனக்கு நல்ல வரவேற்பு. நிச்சயமாக வந்தவாசி இந்தமுறை மாற்றி யோசிக்கும்" என்கிறார் இவரும்.

விலைவாசிப் பிரச்னை பெண்களை அலற வைத்துள்ள நிலையில், ஆண் வாக்காளர்கள் தி.மு.க. பக்கம் உறுதியாக நிற்கிறார்கள். "கலைஞர் ஆட்சியில் அன்றாடம் ஒரு புதிய திட்டம். ஒரு ரூபாய் அரிசி, கலைஞர் காப்பீடு திட்டம் என்று மக்களைக் கவரும் பயனுள்ள திட்டங்கள். அத்தியாவசியமான

என்பதால், தி.மு.க. அரசு இத்தொகுதியைக் கண்டுகொள்ளவே இல்லை. திருச்செந்தூர் அரசு மருத்துவமனையை, மாவட்ட அளவில் தரம் உயர்த்தக் கோரி வருகிறோம். இதுவரை நடவடிக்கை ஏதுமில்லை. இதற்கெல்லாம் இந்த இடைத்தேர்தலில் தி.மு.க. அரசுக்குப் பாடம் புகட்டக் காத்திருக்கின்றனர் தொகுதி மக்கள்" என்கிறார் திருச்செந்தூர் பேரூராட்சி மன்றத் தலைவர் (அ.தி.மு.க.) மகேந்திரன்.


* மகேந்திரன்

சமீபத்தில் மத்திய அரசு கொண்டு வந்துள்ள மீனவர் சட்டம் குறித்து, கடும் அதிருப்தியில் உள்ளனர் மீனவர்கள். திருச்செந்தூர் தொகுதியின் கடலோர மீனவ கிராமங்களில் கறுப்புக் கொடியேந்தி தேர்தல் புறக்கணிப்பு செய்வதாக அறிவித்துள்ளனர். "தேர்தல் நாளுக்கு முன்பாக அச்சட்டத்தில் முக்கிய திருத்தங்கள் கொண்டுவந்தால் மட்டுமே நாங்கள் சுமார் முப்பதாயிரம் பேர் வாக்களிக்கச் செல்வோம்" என்கிறார் ஆலந்தலை கிராம மீனவர் ராஜ்.

ஆலந்தலை சுனாமி நகர் குடியிருப்பில் அரசு கட்டித் தந்துள்ள எழுபத்தைந்து வீடுகளைத் தற்போது வெள்ளம் சூழ்ந்துள்ளது. "நாலு வருஷமா இதே பாடுதான் எங்களுக்கு. எப்ப மழை பெய்஦்சாலும் வீட்டைச் சுத்தி தண்ணி சூழ்ந்துடும். கடைசி வீட்டுக்காரங்க இடுப்பளவு தண்ணியில நீந்தித்தான் வெளியே வரணும். எங்களுக்கு விமோசனம் செய்யறவங்களுக்கு நாங்க வோட்டுப் போடுவோம்!" என்கிறார் வெட்கமி.





* முனுசாமி (அ.தி.மு.க)

மளிகைச் சாமான்கள் ரேஷன் கடையில் மலிவு விலையில் கிடைக்கும்போது வெளிமார்க்கெட் பற்றி ஏழை எளிய மக்கள் கவலைப்படுவதில்லை" என்கிறார் வாச்சனூர் ரவி.

"இந்தத் தொகுதியில் 379 கோடிக்கு வளர்ச்சிப் பணிகள் நடந்துள்ளன. இது தொடரும். கும்மிடிப்பூண்டி, சாத்தான்குளம், சைதாப்பேட்டை இடைத்தேர்தல்களில் துஷ்பிரயோகம், முறைகேடுகள் செய்த ஜெயலலிதாவுக்கு எங்களை விமர்சிக்கச் சிறிதும் தகுதியில்லை" என்கிறார் பிரசாரத்தின் மும்முரமாக ஈடுபட்டுள்ள உணவுத் துறை அமைச்சர் எ.வ.வேலு.

இதற்கிடையில் பா.ம.க. 'யாருக்கும் வாக்களிக்க விருப்பமில்லை' என்ற வாய்ப்பைப் பயன்படுத்த வேண்டுமென்று பிரசாரத்தில் இறங்கியிருக்கிறது. "அப்படி, இப்படி என்று சடுகுடு ஆடிக்கொண்டிருந்தால் டாக்டரை யார் நம்புவார்கள்? தி.மு.க. ஆட்சியில் மக்கள் திருப்தியாக இருக்கிறார்கள்" என்று சொன்னார் வெள்ளிப்புலம் கிராமத்தைச் சேர்ந்த காளி கவுண்டர். "ஐயா அமைதி காத்திருக்கலாம்" என்றார் ஒரு பா.ம.க பிரமுகர்.

'ஜெயலலிதாவின் இரண்டு நாள் பிரசாரம் மாற்றத்தைக் கொண்டு வரும்' என்று நம்புகிறார்கள் அ.தி.மு.க.வினர். ஆனால், சமீபத்திய வரலாற்றைப் பார்க்கும்போது அதற்கான வாய்ப்பு மிக மிகக் குறைவே! **– ப்ரியன்**

படங்கள்: **ராஜன்**



## இடைத்தேர்தல் பாலிடிக்ஸ்

*"கலைஞரோட மருத்துவக் காப்பீட்டுத் திட்டம் எங்க பத்து வயசு மக உயிரைக் காப்பாத்தியிருக்கு. இதய ஆபரேஷன் பண்ணி இப்பதான் வீட்டுக்கு வந்திருக்கோம். எங்க வோட்டு யாருக்குன்னு உங்களுக்கே தெரியும்!" எனச் சொல்கிறார் நா.முத்தையாபுரம் கிராமத்தின் சரோஜா.*

கோமதி ஆகனேசன் (தே.மு.தி.க.)





***தொ**குதிக்குள் கிராமப்புறங்களில் அனிதா ராதாகிருஷ்ணனுக்கு தனி செல்வாக்கு நிலைத்துள்ளதாகத் தெரிகிறது. எப்படியும் தன் பழைய சகாவைத் தோற்கடித்தே தீர வேண்டுமென, அ.தி.மு.க.*

## திருச்செந்தூர்

*மிகக் கடுமையாகத் தேர்தல் பணியாற்றினாலும், தொகுதி மக்களிடம் அனிதாவின் அணுகுமுறை மற்றும் செல்வாக்கு காரணமாக வெற்றிக்கனியைப் பறித்து வந்துவிடுவார் என்ற கருத்து நிலவுகிறது. தி.மு.க. - அ.தி.மு.க. என இரு தரப்பினரிடையே தேர்தல் பணிகளின் வேகமும் கடுமையும் அதிகமாகும் போது, விரும்பத்தகாத சம்பவங்கள் அரங்கேறும் சூழலும் நிலவி வருகிறது.*

*- **ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு***

தனது மின்னஞ்சலில் வந்து விழுந்த தகவலைப் பார்த்து ஆச்சர்யப்பட்டுப் போனான் சேகர். இங்கிலாந்தில் உள்ள ஒரு லாட்டரி நிறுவனத்திலிருந்து வந்த மின்னஞ்சல் அது. லட்சக் அனுப்புவதற்குச் சில நடைமுறைகள் உள்ளன. அதற்கு முதல் கட்டமாக ஒரு லட்சம் பணம் தேவை' என்றது. 'தன்னால் முடியாது' என்று பதில் சொன்னான் சேகர். 'சரி... ஐம்பதாயிரம் அனுப்பி வையுங்கள்' என்றது நிறுவனம். அதையும் அவர்கள் நாட்டுப் பணமான பவுண்டாக அனுப்பச் சொன்னது. சேகரும் தயங்கியபடியே அனுப்பி வைத்தான். மறுபடி ஒரு நபரை நியமித்து, பரிசுத்

# ஜெகஜ்ஜால சைபர்

கணக்கான ஈ.மெயில் ஐ.டிக்களைக் குலுக்கி எடுத்ததில் சேகரின் ஐ.டி.க்கு ஒரு கோடி ரூபாய் பரிசு கிடைத்திருப்பதாகச் சொன்னது அந்த மின்னஞ்சல். தனக்கு இவ்வளவு ரூபாய் பரிசாகக் கிடைத்திருப்பதை மிக ரகசியமாகவே வைத்துக்கொண்டான் சேகர். அந்த லாட்டரி நிறுவனம், 'பரிசுப் பணத்தை

தொகையை அவர் மூலம் அனுப்பப் பணம் வேண்டும் என்றார்கள். அதற்கடுத்து சுங்கத்துறை மற்றும் வேறு பல நடைமுறைகளுக்காகப் பணம் கேட்டார்கள். இப்படியே பத்து லட்சம் வரை கொடுத்தாகிவிட்டது. ஆனால், பரிசுத் தொகையைக் காணோம். மின்னஞ்சல் தவிர இந்தியத் தொலைபேசி நம்பர்களிலிருந்து பணத்துக்காக சேகருக்கு நினைவூட்டல்கள் வேறு. கடைசியில் பரிசுத் தொகையும் சேகர் வங்கிக் கணக்கில் சேரவில்லை. யாரும் நேரில் வந்தும் கொடுக்கவில்லை. சேகரின் வங்கிக் கணக்கிலிருந்து பத்து லட்சம் பறிபோனது: அவ்வளவுதான். தான் ஏமாற்றப்பட்டதை உணர்ந்து அதிர்ச்சியடைந்தான் சேகர்.

''சேகரைப் போல பலர் ஏமாந்து பணத்தை இழக்கிறார்கள்'' என்கிறார் **சென்னை மாநகரக் காவல் துறையின் சைபர் குற்றங்களைக் கண்டு பிடிக்கும் உதவி ஆணையாளர் டாக்டர் சுதாகர்.** ''ஏமாற்றப்படுகிறோமோ என்று சந்தேகிக்க ஆரம்பிக்கும் சம



● சுதாகர்

யத்தில் பெருந்தொகையை அவர்கள் இழந்திருப்பார்கள். ஏமாற்றுக்காரர்கள் போலியான மின்னஞ்சல் முகவரியில், அதுவும் வெளிநாடுகளில் இருந்து செயல்படுவதால் அவர்களின் இருப்பிடங்களைக் கண்டுபிடிப்பது மிகவும் சிரமம்'' என்கிறார் சுதாகர்.

**இந்த வகைக் குற்றங்களுக்கு 'சைபர் க்ரைம்' என்று எப்படி பெயர் வந்தது?**

''வில்லியம் கில்ஸன் என்ற எழுத்தாளர், 'நியூரோமேன்சர்' என்ற நாவலில் இது போன்ற குற்றங்களை 'சைபர் குற்றங்கள்' என்று குறிப்பிட்டார். வலைத்தளம், ஈ.மெயில், மொபைல் போன் என்று தகவல் தொழில்நுட்பச் சாதனங்கள் அனைத்தின் இயக்கத்தின் பின்னணியிலும் கண்ணுக்குத் தெரியாத உலகமொன்றிருக்கிறது. இதை உணர்த்தும் வகையில்தான் இந்த அடிப்படையிலான குற்றங்களுக்கு 'சைபர்' க்ரைம் என்று பெயர் வைத்திருக்கக்கூடும்.''

**இதில் எத்தனை வகைக் குற்றங்கள்?**

''உங்கள் இ.மெயில் ஐ.டியைத் தெரிந்துகொண்டு மோசடி, வலைத்தளம் மூலமாக வங்கிப் பணத்தை அபேஸ் செய்வது, கிரெடிட் கார்ட் நம்பரைத் தெரிந்து கொண்டு மோசடி, ஆன்-லைன் சீட்டிங், மிரட்டும் வகையிலும், ஆபாசமாகவும் மின்னஞ்சல் மற்றும் மொபைலில் மெஸேஜ் அனுப்புவது என்று பலவகை உண்டு.''

**இதுபோன்ற மோசடிகளில் மாட்டாமல் விழிப்போடு இருப்பது எப்படி?**

# கிரிமினல்கள்!




''உங்கள் கணக்கை Update செய்கிறோம்' என்று கணக்கு எண், உபயோகிப்பவர் பெயர், பாஸ்வேர்டு ஆகியவற்றைக் கேட்பார்கள். கொடுத்தால் தொலைந்தது. உங்கள் பணம் அவுட். வங்கிகள் பெயரில் போலி மின்னஞ்சல் தளங்கள் நிறைய உண்டு. எந்த வங்கியும் வாடிக்கையாளரிடம் ஈ.மெயில் மூலமாக சொந்த விவரங்களைக் கேட்பதில்லை. எனவே, 'நெட் பேங்கிங் வசதி நிறுத்தப்படும்' என்று வரும் மின்னஞ்சலை நம்பி எந்தத் தகவலையும் கொடுக்க வேண்டாம். இதை phishing e.mail என்று சொல்வார்கள். போலியான இதுபோன்ற வலைத்தளங்களை spooling sites என்பார்கள். அவற்றின் URL ஒரு முக

**தகவல் தொழில்நுட்ப சாதனங்கள் அனைத்தின் இயக்கத்தின் பின்னணியிலும் கண்ணுக்குத் தெரியாத உலகமொன்றிருக்கிறது.**

1. ஏ.ஆர்.ரஹ்மான்
2. ஐஸ்வர்யா ராய்
3. சினேகா
4. அசின்
5. விஜய்

அனுப்பியவர்:
'பரத் ராம்'

**55-ம் பக்கத்துச் கட்டிங்க யாரு?**

வரியைக் காட்ட, உண்மையான முகவரி வேறொன்றாக இருக்கும். நாம் 'நமது வங்கிதான் கேட்கிறது' என்று தகவல்களைக் கொடுத்தால், அவை போலியான வலைத்தளங்களுக்குச் சென்றுவிடும். ஈ.மெயிலில் அப்டேட் என்று வரும் குறியீட்டை கிளிக் செய்ய வேண்டாம். பூட்டுக் குறியிட்டு உள்ள இணையதளம் உண்மையானது, பாதுகாப்பானது. நம்பிக்கையான தளங்களைத் தவிர மற்றவற்றில் கிரெடிட் கார்டு, டெபிட் கார்டு நம்பரைக் கொடுக்கக் கூடாது. வேலை, பரிசு போன்ற மின்னஞ்சல்களில் உஷாராக இருக்கவும். பாஸ்வேர்ட் மிக மிக ரகசியம். அடிக்கடி மாற்றவும். நெட்சென்டர்களில் வங்கிக் கணக்கை ஆபரேட் செய்ய வேண்டாம். சாட் செய்து கொண்டிருக்கும் ஒரு நபரை நேரில் சந்திக்க வேண்டாம். ஃபோட்டோ, தனி விவரங்கள் வலைத் தளங்களில் கொடுக்க வேண்டாம். மொபைலில் ப்ளூடூத்தை, தேவைப்படும்போது மட்டும் ஆன் செய்யவும். உபயோகித்த மொபைலை வாங்க வேண்டாம். உங்கள் அடையாளத்தில் வேறொருவருக்கு மொபைல் வாங்கித் தர வேண்டாம். ஆபாச வலைத்தளங்களை லாக் செய்யுங்கள். ஏ.டி.எம்.மில் பணம் எடுக்கும்போது ஸ்க்ரீனில் 'பரிவர்த்தனை முடிந்தது' என்று வரும்வரை பொறுத்திருந்து நகருங்கள். பிரச்னை என்றால் தயங்காமல் காவல் துறையை அணுகுங்கள்.''

**குற்றவாளிகளின் புதுப்புது டெக்னிக்கை காவல்துறை கண்டுபிடிக்கிறதா?**

''நிச்சயமாக. 2003ல் சைபர் க்ரைம் குறித்து 35 புகார்கள்தான். 2008ல் 852 புகார்கள். அறிவியல் சார்ந்த தொழில்நுட்பம், பொதுவிசாரணை, சரியான அணுகுமுறை என்று செயல்பட்டு பல குற்றங்களைக் கண்டுபிடித்திருக்கிறோம். போலி வலைத்தளங்கள், மின்னஞ்சல் ஆகியவற்றைக் கண்டுபிடித்திருக்கிறோம். எங்கள் காவல் ஆணையாளர் ராஜேந்திரன் இந்த வகையில் எங்களுக்குத் தேவையான பயிற்சியையும், கட்டமைப்பையும் உருவாக்கி, நாங்கள் செம்மையாகச் செயல்பட வழிகாட்டிக் கொண்டிருக்கிறார்.''

**- ஸ்ரீநி**

படம்: **ராஜன்**



நமக்குத் தேவையான பொருட்களை வீட்டுக் கதவைத் தட்டி நம் கையில் யாராவது தந்தால் எப்படியிருக்கும்? www.storesondoors.comக்குள் நுழைந்தால், நிஜமாகவே இப்படி நடக்கும். இத்தளத்தில் தேவையான பொருட்கள், ப்ராண்ட், எடை இவற்றைக் குறிப்பிட்டு விட்டால், வீடு தேடி வந்து பொருட்களைக் கொடுத்துப் பணம் பெற்றுக் கொள்கின்றனர். ''நேர விரயம், டிராலி தள்ளுவது, பில்லுக்கு 'க்யூ'வில் நிற்பது, தள்ளுபடி என்கிற பெயரில் கண்ணாமூச்சி ஆடுவது... இந்தத் தொல்லைகளிலிருந்து விடுதலை பெறும் நோக்கத்தில் உருவானதே, இந்த stores on doors திட்டம்'' என்கிறார் நிறுவன இயக்குநர் வெங்கட் கிருஷ்ணா.

✉ ரவி சுப்ரமண்யனின் 'தத்வமஸி' சிறுகதை இசை ஸ்பெஷலுக்கு வசீகரம்!

**- க.சுந்தர், நெய்வேலி**

✉ 'ராகப் பெருவெளி' கவிதை படித்து காலையில் 'பூபாளமு'ம், இரவில் 'நீலாம் பரி'யும் கேட்பதுபோல் உணர்ந்து நல்ல கச்சேரி கேட்ட 'சந்தோஷ்' அடைந்தேன்.

**- சி.என்.ரமாதேவி, சென்னை - 70**

✉ சீஸன் ஸ்பெஷலுக்குச் சிகரம், நித்யஸ்ரீயின் குழந்தை சிந்தும் மோகனப் புன்னகைதான்!

**- டி.முரளி நாராயணன், சென்னை - 87**

✉ சிரிப்புக் கச்சேரியில் கோபுலு வின் கை வண்ணமும் ஹாஸ்ய ப்ரியாவின் ராகமும் பலே பலே!

**- என்.சீத்தாலட்சுமி, சென்னை - 40**

✉ லயச் சக்கரவர்த்தி வலையப்பட்டி, பத்து ஸ்டில்களில் ஒரு தனி ஆவர்த்தனமே நடத்திவிட்டார்! **- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு**

✉ 'இசை' பற்றிய எவ்வளவு அலசல்கள்! அடேயப்... பா... சீஸன் ஸ்பெஷல் 'சீஸன் கிப்ட்...!'

**- பா.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

✉ "எங்கள் அமைப்பின் வளர்ச்சியைக் கவனித்து தோழமையுடன் வாழ்த்தியிருக்கிறது; அவசியப்பட்டபோது விமர்சித்து எச்சரித்தும் இருக்கிறது!" - YACMன் இந்த வாக்குமூலம், 'கல்கி'யின் இசைப் பணிக்கும், நேர்மைக்கும் அற்புதச் சான்று!

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

✉ உண்மையான ரசிகனின் ஆதங்கத்தை உணர்த்தியது. 'கார்ப்பரேட் ஆகும் கர்நாடக சங்கீதம்!'

**- எஸ்.ஜானகி, உடுமலைப்பேட்டை**

✉ இலங்கை அதிபர் தேர்தலில் ஃபொன்சேகாவை ஜெயிக்க வைப்பது, வாணலிக்குப் பயந்து அடுப்பில் குதிப்பது போன்றது என்று உணர்த்திய தலையங்கம் சிந்திக்கத்தக்கது!

**- அயன்புரம் த.சத்தியநாராயணன், சென்னை - 38**

✉ பண்ருட்டி ராமச்சந்திரனின் பேட்டியில் பளிச்சிட்டது அவரது தன்னம்பிக்கை!

**- அ.முரளிதரன், மதுரை -3**



## மோகனப் புன்னகை!

✉ வண்ணத்தூரிகை அழகான படங்களோடு புத்தகமாக வருமா...? ஆவலாக உள்ளது.

**- என்.ஏ.லதா, பழனி-1**

✉ கிரேஸி மோகனின் கேள்வி பதில் வேடிக்கையும், விறுவிறுப்புமாக மிகவும் graceful ஆக இருப்பதால், இனிமேல் அவரை grace'y mohan என்றும் கூப்பிடலாம்!

**- கப்புடுபுத்திரன் பி.எஸ். ஸ்ரீராம்**

இன்டர்நெட் புத்தக வியாபாரம் வளர்ந்திருக்கிறதா? வாசகர்கள் புத்தகங்கள் வாங்குவதில் ஆர்வத்தோடு இருக்கிறார்களா? வலையுலகில் கடை நடத்துபவர்களிடம் கேட்டோம்...

**பத்ரி சேஷாத்ரி, கிழக்கு பதிப்பகம்:**

**2004**ல் நாங்கள் பதிப்பகம் ஆரம்பித்த போது, கூடவே ஆன்லைனில் புத்தகங்கள்

வரை ஆன்லைனில் விற்பனை செய்கிறோம்.

இந்த வளர்ச்சிக்கு முக்கியக் காரணம் என்று நான் நினைப்பது, ஒன்றே ஒன்று தான். புத்தகத்தின் விலை ரூ.50 தான் இருக்கும். அதை போஸ்டலில் அனுப்ப இன்னும் ரூ.30 எக்ஸ்ட்ரா ஆகும். பலர் ஷிப்பிங் சார்ஜுக்குத் தயங்கியே ஆன்லைனில் புத்தகங்கள் வாங்குவதைத் தவிர்த்தனர்.

## புத்தக விற்பனையில் சரிவு ஏற்பட்டிருக்கிறதா?

# இணையத்தில்



✻ பத்ரி சேஷாத்ரி

வாங்கும் வசதியையும் செய்தோம். அப்போது மாதத்துக்கு ரூ. 5000 வரை விற்பனை நடந்தாலே பெரிய விஷயம். இன்றைக்கு நாங்கள் மாதத்துக்கு ரூ.65,000

நாங்கள் ஒரு திட்டம் அறிவித்தோம். மினிமம் ரூ.250க்கு மேல் புத்தகம் வாங்குபவர்களுக்கு, இந்தியாவின் எந்த மூலையில் இருந்து ஆர்டர் செய்தாலும், ஷிப்பிங் இலவசம். உடனே கைமேல் பலன். கடகடவென ஆர்டர்கள் வந்து விழ ஆரம்பித்தன. இன்றும் அது தொடர்கிறது.

◆ சசிரேகா



**சசிரேகா பால சுப்பிரமணியன், தமிழ் நூல் டாட்காம்:**

**1999**-ல் தமிழ் நூல் டாட் காம் தொடங்கினோம். அப்போது ஆன்லைனில் தமிழ்நூல் விற்பனையை வேறு எவரும் தொடங்கவில்லை. இன்றைய அவசர வாழ்க்கை முறையில் உட்கார்ந்த இடத்தில் ஆணையிடும் தொழில்நுட்ப வசதியைப் பலரும் விரும்பிப் பயன்படுத்துவதால், இணையப் புத்தகக் கடைகளின் எண்ணிக்கை பதினைந்துக்கும் மேலாக உள்ளன. மின்னம் பலத்தில் புத்தக விற்பனையும் கூடியுள்ளது. மேலும் மின் புத்தக வடிவில் புதிய விற்பனைக் களம் உருவாகியுள்ளது. கடந்த 10 ஆண்டுகளில் தோராயமாக 40 மடங்கு வளர்ச்சி வந்துள்ளது.

எந்தத் தொழிலிலும் கால மாற்றங்களுக்கும், வாழ்க்கை முறை மாற்றங்களுக்கும் தொழில்நுட்ப வளர்ச்சிக்கும் ஏற்பப் புதிய விற்பனை நுட்பங்களை, அணுகுமுறைகளைக் கையாண்டாலே தொய்வின்றி முன்னேற்றம் காண முடியும். இணையப் புத்தகக் கடைகளுக்கும் இது பொருந்தும். மின் நூல்கள், ஒலி நூல்கள், கைப்பேசி நூல்கள் ஆகிய புதுமை முயற்சிகளை நாங்கள் நாடாததும் லேசான தொய்வுக்குக் காரணம். 11 ஆண்டுகளின் பின்னர் சற்றேறக்குறைய 50,000 தலைப்புகள் ஏற்றியுள்ளோம். இவற்றுள் 95 சதவிகிதம் தமிழ்த் தலைப்புகள். இந்நூல்களின் இருப்புகளையும், விலை மாற்றங்களையும், புதிய நூல்களின் வருகை விவரங்களையும் தொடர்ச்சியாகக் கண்காணித்துப் புதுப்பித்தல் பெரிய சவாலாகவே உள்ளது.

**டி.ஸ்ரீனிவாசன், நியூ புக்லேண்ட்ஸ் டாட் காம்:**

**2006**ல் ஆன்லைன் புத்தகக் கடையைத் தொடங்கினோம். எங்களிடம் ஏற்கெனவே புத்தகக் கடை இருப்பதால், எங்களுக்குப் பெரிய அறிமுகம் தேவையாக இருக்கவில்லை. 20,000 புத்தகங்களோடு ஆரம்பித்தோம்.

எங்கள் விற்பனை உள்நாட்டில் மிகவும் நன்றாக இருந்தது. வெளிநாட்டு ஆர்டர்களும் தொடர்ந்து வந்து கொண்டு இருந்தன. அப்போதெல்லாம் கப்பல் வழியா ஷிப்பிங் பண்ற வசதி இருந்தது. ஐந்து கிலோ வரை ரூ.175தான் கட்டணம். அப்புறம் போஸ்டல் ரேட்டுகள் உயர்ந்தன. இப்போ ரூ. 2000 கட்டி, 20 கிலோ வரை அனுப்ப, ஏர் மெயில் வசதி வந்திருக்கிறது. இது நல்ல ஷிப்பிங் ரேட். உலகம் முழுக்க விற்பனை இருந்தாலும் பெரும்பாலும் இலங்கைத் தமிழர்கள்தான் அதிகமாக வாங்குகிறார்கள்.



மாடர்ன் லிட்ரேச்சர், சித்தர் இலக்கியம், பழம்இலக்கியப் புத்தகங்களைத்தான் இதுபோன்றவர்கள் விரும்பிப் படிப்பார்கள்.

எங்ககிட்ட ஆர்டர் கொடுத்துட்டா, புத்தகங்களை எப்படியும் கொண்டு போய்ச் சேர்த்துடுவோம்ங்கற நம்பிக்கைதான் எங்க மூலதனம். ○

# இலக்கிய பர்ச்சேஸ்!



# தீபு - கோபு
























கருத்து:கார்த்தி படம்:கதிர்

# HOW SAFE IS TIMBER AT YOUR HANDS?

**Your Doors or Furniture will be at its best.**

**When you carryout the following processes.**

**Do not use wood immediately after cutting it from the log.**



## DRY THE TIMBER

Fresh out timber, including teakwood, contains moisture upto 80%. When we use timber with such high moisture content, the wood starts deshaping in various ways. Ideal moisture content for retaining the shape of the timber is 14% to 18%. Natural Seasoning or Air-drying does not bring down the moisture content to less than 30%, even after 6 months. KILN drying as per IS Code 1141, alone can bring down the moisture content to the ideal level of 14% to 18%.

## PROTECT THE TIMBER

While it is common to apply by brush wood preservative oil, maximum durability is achieved under Pressure Impregnation Method by injecting CCB Chemicals into the wood, as per IS Code 401.

# MAYURAM TIMBER


257, GST Road, Tambaram, Chennai - 600 045

Phone : 22415297 / 22411261 / 22413257

E-mail : mayuramtimbers@sancharnet.in website : www.mayuramtimbers.com

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

# மைலாப்பூர் மற்றும் காஞ்சிபுரம்



Sree Annamalaiyar Thunai




NATURAL SILK




# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ்®

## காஞ்சிபுரம் பட்டு சேலைகள்

## விழா கால தள்ளுபடி விற்பனை

| | | | | |
|---|---|---|---|---|
| Rs. ~~1350~~<br>Rs. 950 | Rs. ~~1650~~<br>Rs. 1150 | Rs. ~~3700~~<br>Rs. 1850 | Rs. ~~5800~~<br>Rs. 2900 | Rs. ~~8400~~<br>Rs. 4200 |













பழைய காஞ்சிபுரம் பட்டு சேலைகள்
எந்த நிலையிலும் எக்ஸ்சேஞ் செய்யப்படும்

**10-50% தள்ளுபடி**

ஞாயிறும்
விற்பனை உண்டு

All Major Credit Cards Accepted

**மைலாப்பூர் :** எண் 13/7, வடக்குமாட வீதி, கபாலீஸ்வரர் கோயில் அருகில்,
(அம்பிகா அப்பளம் கீழ் தளம்) மைலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 2461 0444, 2493 3097

**காஞ்சிபுரம் :** எண் 20, இரயில்வே ரோடு, அருணா தியேட்டர் எதிரில்
காஞ்சிபுரம்-631 501. போன் : 2722 0248

பெங்களூரில்
**18-12-2009 to 27-12-2009**
**ஸ்ரீ பவானி கல்யாண மண்டபம்**
கிழக்கு ஆஞ்சநேயர் கோயில் ரோடு,
பசவன்குடி, காந்தி பஜார், பெங்களூர்-560 004.
செல் : 97393 58536